சிவமயம்

# குமரகுருபரன்



மலர் 12]  பிலவ-௵ ஐப்பசி-மீ ௴-௳ (17-10-61)  [இதழ் 10

தனிப் பிரதி 13 நயா பைசா

## ஆசிரியர் குழு



## உள்ளுறை



---

உ

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 12 | பிலவ-ஞு ஐப்பசித் திங்கள் 1-ம்வ [17-10-61] | இதழ் 10

# சிதம்பரச் செய்யுட் கோவை

## மாணிக்கவாசக அடிகள்



[ கட்டுரை 50 ]

கடவுள் ஐந்தொழில் புரிகின்றார். அவை இடைவிடாமல் நிகழ்கின்றன. உயிர்கள் ஐந்தொழிலுட் படுகின்றன. உயிர்கள் தாம் நுகரும் வினைப்பயனுக்குத் தக்கவாறு எத்தொழிலையேனும் அடைந்து கொண்டிருக்கும். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தும் கடவுள் செயல். உயிர்களின் செயல் அல்ல. அவ்வைந் தொழிலுட்படுதலே உயிர்களுக்கு உரியது. அப்பாடு அக்கடவுளது அருள் வழியதே. உயிர்கள் வழியது அன்று. அதனால் தான் சுதந்திரவீனன் என்பர் உயிரை.

உடம்பையும் அதற்குத்தக்க உபகரணங்களையும் (சுக துக்கபோக சாதனங்களையும்) அளிக்கப் பெறுவதே உயிர்கள்,

கடவுளது படைப்புட்படுவதாகும். அவற்றின் நீக்கமே அழிப் புட்படுவது. அப்படைப்பிற்கும் அழிப்பிற்கும் இடைப்பட்டதே இருத்தல். அவ்விருத்தற்கு ஏதுவே காத்தல். உலகப்பொருள் களில் மயக்கம் உற்று மற்றென்றும் அறியாமையே மறைப் புட் படுவது. திரோபவம் என்பது இதனையே. பற்றற்றான் பற்றினைப் பற்றிப், பலபிறவிகளிலே தொடர்ந்து பற்றிவரும் பற்றைவிட்டுத், திருவருளில் முழுகுதலே அருட்பேறு, அவ் வைந்தொழிலும் (பஞ்சகிருத்தியமும்) இறைவன் 'திருக்கூத்து' எனப்படும்.

அத்திருக்கூத்து ஒன்றே உயிரெல்லாம் புகழும் புகழ்க் குரிய செயல். அதைப் புகழ்வதே உயிர்க்குக் கடனாகும். அப் புகழ் எல்லாம் "சிவனெனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி யெம்மான்" ஆகிய மெய்ப்பொருளையே சேரும். வேறு எப்பொருட்கும் அப்புகழ் உரியதன்று. அதனால் தான் திரு- வள்ளுவர் 'பொருள் சேர் புகழ்' என்றார். அப்புகழைப் புரிந் தாரிடத்தில் தான் இருள்சேர் இருவினையும் சேரா. புரிதல் இடைவிடாது சொல்லல். 'சிவகீர்த்தனம்' என்பது அதையே. தற்புகழ்ச்சியே சாலவிரும்புவார்க்குச் சிவகீர்த்தனம் எங்ஙனம் அமையும்? குமரகுருபரர், இப்பாடலில் நடராசப் பிரானைப் 'புகழோய்' என்று அழைத்துத் தாம் சொல்லும்புகழ் மொழிகளைக் கேட்டருளல் வேண்டும் என்று வேண்டுகின்றார். அப்புகழ் 'நடம்புரியும்புகழ்' எனப்பட்டது. அதற்கு விளக்கமே இதுகாறும் எழுதியது.

அந்நடம் பொன்மன்றில் நிகழ்கின்றது. அதைப் 'பொன் செய்த மணிமன்று' என்றார். அங்கே நிகழும் திருக்கூத்தைக் கண்டு கண்குளிரப் பெறுவார் யார்? உலகெலாம் படைத்த தாயார் சிவகாமியம்மையார். அவர்ஒருவரே எல்லாவுலகங்கட்கும் தனி(ப்பிரதி) நிதியாய் நின்று அத்திருக்கூத்தைக் காண்கின் றார். கண்டுதம் விழிகள் இரண்டும் குளிரப்பெறுகின்றார். அப் பேறு எத்தேவியர்க்கும் இல்லை. அதனால் அத்தாயாரே பெருந் தேவியார் ஆவார். அப்பெருந்தேவியார்க்கு உள்ள இடையும் பெரிதோ என்றெண்ணலாம். பெண்ணுலகிற்கெல்லாம் காரணமும் இலக்கணமும் ஆகிவிளங்கும் அன்னைக்கு பேரிடை

அமைதல் கூடாதன்றே? அவர் இடை சிற்றிடையே. அதுவும் உண்டோ இல்லையோ என மின்னலைப்போன்று அமைந்ததே. அதையே மின்செய்த சிறுமருங்குல் என்றார் ஆசிரியர். 'சிறு மருங்குற் பெருந்தேவி' என்று முரணாக அமையும் தொடர் ஆசிரியர்க்கு உரிய பாட்டியல்புகள் எண்ணிலவற்றுள் ஒன்றனை விளக்குவதாகும்.

அத்தேவியார் கொன்செய்த கலையில் குலையும் கொலை செய்தமதர்(த்த) வேல் (போன்ற) கண்களையும் உடையவர். இதனைத் தரும்தரவு இது:–

"கொன்செய்த கலையல்குற் கொலைசெய்த மதர்வேற்கண்
மின்செய்த சிறுமருங்குற் பெருந்தேவி விழிகுளிர்ப்பப்
பொன்செய்த மணிமன்றில் நடஞ்செய்த புகழோய் கேள்."

இவ்வாறு குரலை உயர்த்துக்கூறிய ஆசிரியர் தாழ்த்து இசைக்கின்றார். தாழிசை ஒரே பொருளில் மூன்று அடுக்கியது. அன்பர் உள்ளத்தில் அழுந்திப் பேரின்பம் விளைக்கும் வண்ணம் அம்மூன்றும் ஊன்றும். அதில் ஐயமே இல்லை.

சிவகாமியம்மையார் திருவிழிகுளிர்ப்பத் திருநடஞ்செய்தருள்பவர் நடராசர் என்பது முன்னர் அறிந்தது. அவ்விழி குளிர்க்குமாறு நிலவும் அப்பெருமானது திருமேனிநிலைமை மூன்று தாழிசையிலும் கூறப்படுகின்றது.

### முதற்றாழிசைப் பொருள் :–

கண்கள் கயல்களைப் போன்றன என்பது கவிமரபு. இம் மரபு தெரியாத கவிகள் கண்களை உண்ணமுடியாதே என்று கருதிக் கவிஞர்களை அவமதிப்புறுத்தும் முயற்சியில் ஈடுபடுகின்றன. அம்மையார் திருக்கண்கள் ஐயனார் திருமேனியை நோக்கிய வண்ணமே இருக்கின்றன. வைத்த கண்ணை வாங்காமல் இருக்கின்றார் அம்மையார். கடலில் உள்ள கயல்கள் கரையில் வாரா. வந்தால் என்னாகும்? அம்மையார் கண்களாகிய கயல்களுக்கு ஐயனார் திருமேனி புதியநீர்ப்பெருக்கம் உற்ற பழைய பெரிய கடலாகும். அதுபேரின்பக்கடல். பேரின்பக் கடலாகிய நடராசனை நீங்கிப் பேரறிவொளியாகிய அம்மை

யாருடைய செங்கட்கயல்கள் அகலவே மாட்டா. அகன்ருல், உயிர்கள் அனைத்தும் குருட்டுயிர்களேயாகும். திருக்கூந்தலின் சிறப்பும் ஈண்டுள்ளது. கண்ணின் கருமை கூந்தலின் கருமை இரண்டும் உறவுடையன.

"முருகுயிர்க்கும் நறுந்தெரியல் மொய்குழலின் மையுண்ட
பொருகயற்குன் திருமேனி புதுவெள்ளப் புணரியே".

இரண்டாவது தாழிசைப் பொருள்:-

கண்ணை மான்கன்ருகச் சொல்லுவதும் மரபு. அம்மான் கன்றுக்குப் பெம்மான் திருமேனி முல்லைப்புறவம் ஆயிற்று. இப்பாடலின் குறிப்புரையாக நம் "தமிழ்த்தெய்வம்" எழுதிய அனைத்தும் கற்றறிதல் சால நன்ருகும்.

"தேன்மறிக்கும் வெறித்தொங்கல் அறற்கூந்தல் திருந்திழைகண்
மான்மறிக்குன் திருமேனி மலர்முல்லைப் புறவமே."

மூன்ருவது தாழிசைப் பொருள் :

கண்ணை வண்டாகக் கூறுவதும் மரபே. வண்டுகள் சோலைகளில் வாழ்தல் இயல்பே. அம்மையார் திருக்கண்கள் ஐயனுர் திருமேனிப் பொழிலில் வாழ்கின்றன.

"பிறையளிக்குஞ் சிறுநுதலப் பெண்ணமுதின் பேரமர்க்கட்
சிறையளிக்குன் திருமேனி தேனளிக்கும் பொதும்பரே".

அதனுல், நின் திருக்கூத்து, எம் அன்னைக்கு உண்ண உண்ண அதிசயம் விளைக்கும் அற்புதம் உடையதாகும்.

அதனுல்,

"மதுவிரி கோதை மடவரற்கு அம்ம
புதுவிருந்து உண்ண உண்ண
அதிசயம் விளைக்கும் நின் அற்புதக் கூத்தே."

---

[தொடரும்]

# மதுரைக் கலம்பகம் உரைநடை



தருமபுர ஆதீன வித்துவான்,
"திருவண்ணுமலை ஆதீனவிரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர்மாமணி, பாலகவி"
வயிநாகரம், திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

(மலர் 12, இதழ் 9-ன் தொடர்ச்சி)

பொருணன் கொருங்கீன்ற பொன்மாடக் கூடல்
இருணன் றிருண்டகண்டத் தெம்மான்—சரணன்றே
மண்டுழாய் உண்டாற்குக் கண்மலரோ டொண்மௌலித்
தண்டுழாய் பூத்த தடம். 3

அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய உறுதிப் பொருள்கள் நான்கினையும் ஒருசேரப்பெற்ற பொன்மயமான மாடங்களை யுடைய கூடல் நகரத்திலே எழுந்தருளியுள்ள இருள் போன்ற பெரிய விடம் பொருந்தியதனுல் கருத்த கண்டத்தையுடைய எமது தலைவனுகிய சொக்கேசப் பெருமானது திருவடிகள், மண்ணைத் துழாவி உண்ட திருமாலினது கண்ணுகிய தாமரை யோடு ஒள்ளிய முடியிலேயுள்ள தண்ணிய திருத்துழாயும் பூத்த இடமாகும்.

தடமுண் டகங்கண் டகத்தாள தென்றுநின் றண்மலர்த்தாள்
நடமுண் டகமகங் கொண்டுய்ந்த வாவினி நங்களுக்கோர்
திடமுண் டகந்தைக் கிடமுண் டிலையெனத் தேறவிண்ணோர்
விடமுண்ட கந்தரச் சுந்தர சுந்தர மீனவனே. 4

இனிமேல் நமக்கு ஓர் உறுதியுண்டு. அகங்காரத்திற்கு இடம் உண்டாகப்போவதில்லை எனத் தேவர்கள் தெளியும்படி ஆலகால விடத்தையுண்ட கழுத்தை உடையவனே! சோம சுந்தரக் கடவுளே! சுந்தர பாண்டியனுக வந்தவனே! தடா கத்திலேயுள்ள தாமரை முட்களோடு கூடிய தாள்களை யுடைய தென்று உனது தண்ணிய மலர்போன்ற திருவடித் தாமரைகளை நெஞ்சத்திலே கொண்டு உய்ந்த விதம் என்னே!.

மீனேறுங் கொடிமுல்லை விடுகொல்லைக்
    கடிமுல்லை வெள்ளைப் பள்ளை
ஆனேறும் வலனுயர்த்த அழகியசொக்
    கர்க்கிதுவும் அழகி தேயோ
கானேறுங் குழல்சரியக் கர்ப்பூர
    வல்லிதலை கவிழ்ந்து நிற்ப
ஊனேறும் முடைத்தலையிற் கடைப்பலிகொண்
    டூரூர்புக் குழலு மாறே. 5

சிறந்த மீனையும் முல்லைக் கொடிகளைப் படர விடுகிற கொல்லைகளையுடைய மணம் மிக்க முல்லை நிலத்துக்குரிய திருமாலாகிய வெள்ளிய பருத்த இடபவேற்றையும் வெற்றிக்கு அறிகுறியாக உயர்த்திய அழகிய சொக்கநாதப் பெருமானுக்குக் காடுபோற் கற்றையாகிய கூந்தல் சரியும்படி கர்ப்பூர வல்லியாகிய மீநாட்சியம்மை தலைகவிழ்ந்து நிற்க ஊன் பொதிந்த முடை நாற்றமுள்ள தலையோட்டில் கடைவாயில் தோறும் பிச்சை ஏற்று ஊருராகச் சென்று உழலுவது அழகாகுமா?

மாற்றென் றிலையென் மருந்துக்கந் தோசொக்கர் மாலைகொடார்
கூற்றென் றலவொரு கோடிகெட் டேன்கொழுந் தொன்றுதென்றல்
காற்றென் றிளம்பிறைக் கீற்றென்று கார்க்கடல் ஒன்றுகண்ணீர்
ஊற்றென் றிவளுக் குயிரொன் றிலையொன் றுடம்பொன்றுமே. 6

அமுதத்தை ஒத்தவளாகிய எனது மகளுக்கு ஒரு மாற்றமுமில்லை. அந்தோ! சொக்கநாதப்பெருமான் தாமணிந்த மாலையை இவளுக்குத் தந்தருளுகின்றாரில்லை. இவள் பொருட்டாக வந்த யமனோ ஒன்றாக இல்லை, ஒரு கோடியாகும். கேட்டை அடைந்தேன். இளமை பொருந்திய தென்றற் காற்று ஒன்று; சிறிய பிறைக் கீற்று ஒன்று; கரிய கடல் ஒன்று; ஆகிய இவையனைத்தும் கூற்றங்களாக உள்ளன. கண்ணீர் ஊற்றையுடைய இவளுக்கு உயிரென வொன்றில்லை, உடம்பென்ற ஒன்று மட்டும் இருக்கிறது.

ஒன்றே யுடம்பங் கிரண்டே யிடும்பங் குடம்பொன்றிலார்
என்றே யறிந்தும்பி னின்றே யிரங்கென் றிரக்கின்றவா
குன்றே யிரண்டன்றி வெண்பொன் பசும்பொன் குயின்றேசெயும்
மன்றே யிருக்கப் புறங்கா டரங்காட வல்லாரையே. 7

சொக்கேசருக்கு உடம்பு ஒன்றே யாகும். ஆனால் அதில் அவருக்கும் மீனாட்சி யம்மைக்கு மாக இடும் பங்கு இரண் டாகும். தமக்கென ஓர் உடம்பில்லாதவரென்பதை அறிந்தும் வெள்ளியும் தங்கமுமாகிய கைலாயமும் மேருமலையுமல்லாமல் வெண்பொன்னையும் பசும்பொன்னையும் அமைத்துச் செய்த வெள்ளியம்பலமும் பொன்னம்பலமும் இருக்கச் சுடுகாட்டை நடன அரங்காகக் கொண்டு ஆட வல்ல அவரைப் பின் தொடர்ந்து எனக்கு இரங்குதல் வேண்டுமென்று இவள் வேண்டு வது என்ன வியப்பு !

வலங்கொண்ட மழுவுடையீர் வளைகொண்டு
  விற்பீர்போல் மதுரை மூதூர்க்
குலங்கொண்ட பெய்வளையார் கைவளையெல்
  லாங்கொள்ளை கொள்கின் றீரால்
பலங்கொண்ட செட்டுமக்குப் பலித்ததுநன்
  றுநீரிப் பாவை மார்க்குப்
பொலங்கொண்ட வரிவளைகள் விற்பதற்கோ
  கொள்வதற்கோ புறப்பட் டீரே. 8

வலிமையைக் கொண்ட மழுவை உடையவரே ! வளையல் களைச் சுமந்து கொண்டு வந்து அவற்றை விற்பவரைப் போல மதுரையாகிய பழம்பதியிலேயுள்ள மேன்மைமிக்க வளையல்களை அணிந்த பெண்மக்களது கைகளில் அணிந்திருக்கிற வளையல் களை யெல்லாம் கொள்ளை யடித்துக்கொள்ளுகின்றீர். உமக்குப் பலம் பொருந்திய ஊதியம் கிடைத்து விட்டது. நல்லது. நீர் இந்தப் பெண்களுக்குப் பொன் மயமான கோடுகளை யுடைய வளையல்களை விற்பதற் கென்றோ கொள்ளுவதற் கென்றோ உமது இடத்தை விட்டுப் புறப்பட்டு வந்தீர் ?

பட்டிருக்கத் தோலசைஇப் பாண்டரங்கக் கூத்தாடும்
மட்டிருக்கும் நீப வனத்தானே — கட்ட
விரும்பரவத் தானேநின் மென்மலர்த்தா ளன்றே
தரும்பரவத் தானே தனே. 9

பட்டாடைகள் பல இருக்க அவற்றை விட்டுவிட்டுப் புலித் தோலையும் யானைத் தோலையும் தரித்துக்கொண்டு பாண்டரங்க மென்னும் ஒருவகைக் கூத்தை ஆடுகின்ற தேன் பொதிந்த

கடம்ப வனத்தில் எழுந்தருளி யிருப்பவனே! ஆபரணமாக அணிந்துகொள்ள விரும்புகிற பாம்புகளை உடையவனே! உனது மலர் போன்ற மெல்லிய திருவடிகளை அடியார்கள் வணங்கித் துதிக்க அது தன்னையே அதற்குப் பரிசாகத் தந்து விடும்.

தனியி ருப்பவ ரென்படு வார்கெட்டேன்
சற்றும் நீதியொன் றற்றவிவ் வூரில்யாம்
இனியிருப்பவொண் ணுதும டந்தைமீர்
இடம ருங்குஞ் சடைமருங் கும்மிரு
கனியி ருக்குங் கடம்பவ னேசனுர்
கண்பு குந்தென் கருத்து ளிருக்கவும்
பனியி ருக்கும் பிறைக்கூற்ற முற்றியென்
பாவி யாவியை வாய்மடுத் துண்பதே. 10

தோழியர்களே! இடது பக்கத்திலும் சடையின் மேலும் உமாதேவியும் கங்கையுமாகிய இரண்டு பெண்கள் இருந்தருளு கின்ற கடம்பவனத்துக்குத் தலைவராகிய சொக்கேசப் பெருமான் கண் வழியாகப் புகுந்து என் கருத்துள்ளே கலந்திருக்கவும் குளிர்ச்சியையுடைய பிறைச்சந்திரனுகிய கூற்றம் முன்வந்து பாவியாகிய எனது உயிரை வாய்மடுத்து உண்ணுகின்றதே! இங்ஙனமிருக்கத் தனியேயிருப்பவர்கள் என்னதுன்பத்தை அடைவார்கள்? கெடுதலை அடைந்தேன். கொஞ்சமும் நீதியென்பது இல்லாத இந்த ஊரில் நாங்கள் இனிமேல் குடியிருக்க முடியாது.

உண்ணமுதம் நஞ்சாகில் ஒண்மதுரைச் சொக்கருக்கென்
பெண்ணமுதும் நஞ்சேயோ பேதைமீர் — தண்ணிதழி
இந்தா நிலமே வெனச்சொலா ரென்செய்வாள்
மந்தா நிலமே வரின். 11

பேதைமைக் குணமுடைய பெண்களே! ஒள்ளிய மதுரை யம்பதியிலே எழுந்தருளியுள்ள சொக்கநாதப் பெருமானுக்கு உண்ணுகின்ற அமுதம் நஞ்சாகுமானல் எனது பெண்ணுகிய அமுதம் அவருக்கு நஞ்சாகுமோ? குளிர்ந்த கொன்றை மாலையாகிய இதனைப் பெற்றுக் கொள்வாயாக. நிலத்தின்மேல் இன்புறுவாயாக என்று சொல்லமாட்டார். மந்தமாருதம் வந்து வீசினல் என்ன செய்வாள்?

---

(தொடரும்)

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 12, இதழ் 9-ன் தொடர்ச்சி]

## I

## SAMBANDAR

(Tamil: TIRU JNANA SAMBANDAMURTI SWAMI)

9. குற்றநீகுணங்கணீகூடலாலவாயிலாய்
சுற்றநீபிரானுநீதொடர்ந்திலங்குசோதிநீ
கற்றநூற்கருத்துநீயருத்தமின்பமென்றிவை
முற்றுநீபுகழ்ந்துமுன்னுரைப்பதென்முகம்மனே.

9. Thou art right and Thou art wrong,
Lord of holy Alavay;
Kinsman, I to Thee belong;
Never fades Thy light away.
Thou the sense of books divine,
Thou my wealth, my bliss art Thou,
Thou my all, and in Thy shrine
With what praises can I bow?

---

(To be Continued)

உ

திருச்செந்திலாண்டவன் துணை.

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு



[புதிய மலிவுப் பதிப்பு — 1691]

புதிய பதிப்பு பிரதி ஒன்றின் கிரயம் ரு. 3–50 ந. பை. ஆகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

(முந்தின பதிப்பு பிரதி ஒன்றின் விலை. ரு. 6/–)

(தபால் கட்டணம் வேறு)

644 பக்கங்கள் கொண்டது. உயர்ந்தரக வெள்ளைத்தாளில் பெரிய எழுத்தில் தெளிவாக அச்சிடப் பெற்றது.

டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் எழுதிய குறிப்புரை, ஆராய்ச்சி, முதலியவற்றுடன் கூடியது.

ஒரே சமயத்தில் 5 பிரதிகளும் அதற்குமேல் வாங்குபவர்களுக்கும் 20% கழிவு உண்டு.

இதன் விற்பனைத் தொகை ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்தைச் சாரும்.

கிடைக்குமிடம்:–

ஸ்ரீ T. M. குமரகுருபரன் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர்
ஸ்ரீவைகுண்டம் P. O. :: (திருநெல்வேலி மாவட்டம்)

# ஸ்ரீ சொக்கநாதசுவாமி திருவருட்பா

மாணிக்கவாசக அடிகள்

கட்டுரை – 9

[மலர். 12, இதழ் 9, பக்கம். 498-இன் தொடர்பு.]

சொக்கநாதன் மீனாட்சி யம்மையை ஒரு கூற்றிலே கொண்டும் தானாட்சி புரிதலை அம் மீனாட்சிக்கே தந்தவன். சிவகாமி பாகன் மீனாட்சி பாகன் என்றெல்லாம் கூறுவது ஒரு பொருளைக் குறித்தே ஆயினும், உலகம் இருபொருளைக் குறித்தே ஆளுகிறது. பெண்டாட்டிக்கு அடங்காதவனைத் தில்லைச் சிவகாமிநாதன் என்றும் கொண்டானைத் திண்டாட வைத்து அடக்கியாளும் பெண்டாட்டி வல்லபம் தோற்ற மதுரை மீனாட்சி யாட்சி என்றும் வழங்குவதை இன்றும் கேட்கலாம். அதை உடன்படாதவர் போலும் தருமைக் குருநாதர் சிவஞானதேசிகர். அதனால்தான், 'தையல் ஓர் கூறுகொண்ட சுந்தரமே' என்றருளி னார் போலும். அப்பெருமான் என்றும் உள்ள சத்தும், எல்லாம் அறியும் சித்தும், குறைவில்லாத இன்பமும் ஆவான். ஆதலின் 'சச்சிதாநந்த சிற்பரமே' என்றார். சித்-ஞானம், பரம்-மேலானது. 'சிற்பரவியோமமாகும் திருச்சிற்றம்பலம்' 'சிற்பரமாம் அம்பர மாம் திருச்சிற்றம்பலம் போற்றி' என்று பெரிய புராணத்திலும் கோயிற் புராணத்திலும் கூறப்பட்டவற்றால் அதை உணர்க.

தருமையாதீனத்தில் முதலாசிரியர் ஆக வீற்றிருந்தருளி யவர் திருஞானசம்பந்தர் என்னும் திருப்பெயர் தாங்கிய சிவ மூர்த்தியார். அவர் திருக்கையில் முதன் முதலில் விளங்கிய சொக்கநாதரை இத்திருவருட்பாவைப் பாடியருளிய சிவஞான தேசிகரும், தம் திருக்கையில் வைத்து வழிபடுகின்றார். திருக் கையில் விளங்கும் காலம் எது? திருவபிடேகம் புரியும்போது திருவொற்றாடை சார்த்துதல் முதலிய சிற்சில பொழுதே, மற்றைய காலம் அன்று. (கையிலே வைத்து வழிபடுவது வீர சைவ மார்க்கம்) அதனால், 'சம்பந்தர் கரத்தில் துலங்கிடு

மணியே' என்றார். நாலாம் பாடலிலும் 'சம்பந்தர் கரத்தில் துலங்கிடும் உருவே' என்றதுணர்க.

'தான்றோன்றி' 'சுயம்பு' 'சயம்பு' மூன்றும் ஒருபொருளன. மதுரைச் சொக்கநாதரும் கடம்பவனத்தில் தோன்றிய சுயம்பு நாதரே. திருவாலவாய்ச் சுயம்பும் குருஞானசம்பந்தர் திருக் கையிற் கிடைத்த சுயம்பும் வேறு வேறு அல்ல. பொற்றாமரைத் தீர்த்தத்தில் முழுகுவித்துப் பெறச்செய்த பொருளும் பெற்ற சிவலிங்கமும் ஒரு பொருளே. அதனால், 'சயம்புவாய் இலங்கிய கோவே' என்றார்.

தருமபுரத் திருமடத்தின் கிழருகில் விளங்கும் தீர்த்தம் ஒரு தனிச்சிறப்புடையது. பூசைமடத்தில் ஸ்ரீசொக்கநாதர்க்குச் செய்யும் வழிபாட்டிற்குப் பயனுதம் பூக்கள் முதலிய பொரு ளெல்லாவற்றையும் பெரும் புண்ணியம் அத்திருக்குளத்துக்கே உண்டு. அதனால், சண்டேசுரர் பெற்ற பேறு அதற்கு வாய்த் துளது. அக்காரணம் பற்றி அத்தீர்த்தம் சண்டதீர்த்தம் எனப் போற்றப்பெறுகின்றது. அதனால், 'செய்ய நன்மணிகள் வானுற வெறியும் திரை செறி சண்டவாவியுமே சிறந்திடும் தருமை' என்றார். அவரது இரங்கலுரை :— "அப்பெருமானை அழைத்து, அறிவை அளித்தருளிய நீ அதைப் பிழைவழியில் இழுத்துச் செலுத்திவருத்தும் கொடிய மனத்தையும் வகுத்தது ஏனோ? அம்மனமோ என் அறிவை உலகாசையில் அழுத்தி, உன் உண் மையை அறிய வொட்டாது தடுத்துத் துன்பத்துக்கே ஆளாக்கி விடுகிறது. எவ்வாறு அம்மனத்தினின்றும் தப்பித்து உய்வேன்?"

"மையறும் அறிவை அளித்த நீ அதனை
வழுவுறும் நெறியினில் ஈர்த்தே
வாட்டிடும் கொடிய மனத்தையும் ஏனோ
வகுத்தனை; இக்கோடு மனமோ
ஐயஎன் அறிவை இப்பிர பஞ்ச
ஆசையில் ஆழ்த்திநின் உண்மை
அறிகிலா தந்தோ துன்பினுக் காளாய்
ஆக்கிய தெந்தவா றுய்வேன்?

(தொடர்ச்சி 558-ம் பக்கம் பார்க்க)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை

# அருணந்தி முனிவர் அருஞ்செயல் மாலை

(இரண்டாம் பகுதி)

தேவகோட்டை "செட்டிநாடு" இதழாசிரியர்
"தருமபுர ஆதீன வித்துவரன், திருவண்ணாமலை ஆதீன விரிவுரையரசு,
மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர்
சித்தாந்தப் புலவர் மாமணி, பாலகவி"
வயிநாகரம். திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்
இயற்றியது.

[மலர் 12, இதழ் 9, பக்கம் 530-இன் தொடர்பு]

கற்கத் தாப்பல் கலைக்கழகத் தமிழ்க்கை யேழு நூருகுங் காணுந் தில்லை வாசகச்சொற் பொழிவுக் கேழா யிரமாமால், நிற்குங் கழுக்குன் றப்பதியி னிலவு மணிவா சகர்நினைவாய் நேய வன்னம் பாலிப்பு நிகழ்த்த வையா யிரங்காழிப், பொற் செம் பதியிற் சட்டவிறை புழுகு நெய்க்கே ழஞ்சாகப் பொலியு நூறு மதுரையினிற் பொன்னர் குமர குருநினைவாய்ப், புற்கொள் பசுவி னிதியாகப் புகுந்த தேழஞ் செனுநூறே புனித வதியார் நினைவாகப் பொற்பார் காசித் திருத்தலத்தில் 15

அன்னம் வழங்க வைம்பதுநூ றந்தப் பதியி லிசைஞானி யம்மை நினைவிற் சோறளிக்க வையா யிரமற் றத்தலத்தி, லின்னன் பாட்டுப் புலவர்நினை வெழுப்பு மன்னம் பாலிப்புக் கீந்த தொகைமு வாயிரமாங் கெங்கள் நீல கண்டர்நினை, வன்னம் பாலிப் புக்குமுன் ருன வாயி ரம்பனசை யண்ணல் சாமி நாதமுனி யருமை நினைவு ராமேச, நன்னர் நகரிற் சோறளிக்க நாடு மேழஞ் சாநூரு நயமார் காசி மூர்த்தியார் நலமார் நினை விற் சோறளிக்க 16

மூவா யிரமாந் திருவாரூர் முன்னு மனுமன் னினைவாக
மொழியுந் தெய்வப் பசுப்பரிசா மூவா யிரத்தோ டைநூறு,
பூவார் காசிக் கலயரன்னம் புனிதப் பாலிப் புக்கென்று புகழிற்
கொடுத்த தொகைமூன்றைப் புணர்ந்த வாயி ரம்பனசை, மூவா
நகரில் மகப்பேற்று விடுதி குமரகுருபரரா முனிவர் நினைவா
யமைப்பதற்கு முன்னைந் தாயி ரங்காசி, யோவா தன்னம் வழங்க
நிதி யுருத்ர பசுப தியார் நினைவி லொண்மை நெடிய மாறர்நினை
வுயரா ருயர் நினைவாக 17

சோறு வழங்க மும்மூன்ரு யிரங்கார் வேட்மன் னினை
வாகத் தூய ராமே சுரப்பதியிற் சொல்லு மன்னம் பாலிப்பு,
விறிற் செயவா ருயிரநாம் விரும்பும் ராம லிங்கமுனி மேலா
நினைவிற் சோறளிக்க விளையு மேழைந் தாநூரு, மேறு திருவா
லங்காட்டி லெங்கள் காரைக் காலம்மை யினிய வன்னம் பாலிப்
புக் கிந்த தொகையை யாயிரமாந், தேறு காஞ்சித் திருப்பதியிற்
செல்வச் சாமி நாதமுனி செம்மை நினைவிற் சோறளிக்கத் திகழு
மைந்தா யிரமாமே 18

கச்சிப் பதியிற் கச்சியப்பர் நினைவுப் பசுவின் பரிசுநிதி
கானு மூவா யிரத்தைநூ ருகு மாங்கே யேகம்பன், உச்சி
யுருத்தி ராக்கத்தே வார நிதியா யுதவுதொகை யுன்னு மைம்ப
தாயிரஞ்சி ரோங்குஞ் சுவாமி மலையிலப்பர், மெச்சு நினைவிற்
புனற்பந்தர் விளங்க வேழைந் தாநூறு விரும்பும் பனசைச் சிவ
சிவகால் நடைகள் மருந்துச் சாலைக்கு, நச்சும் புதிய கட்டி
டத்தை நாடி மூவா யிரமாகு நண்ணுந் தலங்கள் பலவற்றில்
நால்வ ராதி யோர்பாடல் 19

எழுதுங் கல்வெட் டினையமைக்க விருபத் திரா யிரத்
தொருநூ றெங்கள் மதுரைச் சொக்கேசர்க் கின்சந் தனப்பூச்
சியற்றுநிதி, யெழுப தான நூறுநட மேற்ற பரமன் றில்லையினி
லிருக்குங் கோயிற் கதவுநகா சினுக்கே ழாயி ரங்கூடல், தழுவு
தேவா ரத்திற்குத் தந்த தைம்ப தாயிரமாந் தக்க திருச்சி ராப்
பள்ளித் தாயு மானுர் மஞ்சனமெப், பொழுது நிகழ வேழடுத்துப்
பொருந்து மாயி ரம்பனசை பொலியும் வீதிக் குடிதண்ணீர்ப்
பொருணூற் பத்தஞ் சாநூறே 20

வெங்க டப்ப நாயுடுவி னினைவா யிராமேச் சுரநகரில் விளங்கு மன்ன தானநிதி மேலாம் பதினு யிரமாங்கே, பொங்குங் கார்வேட் பொம்மர்பெயர் பொலியு முணவுக் களித்தநிதிப் பொருள்பன் னிரா யிரங்காசிப் புனிதப் பதியிற் புகழ்மிகுந்த, வெங்க டப்பர் நினைவன்னம் விளம்ப நிதியெண் ணுயிரத்தை மேவு மைந்து நூருத் மேலாங் குமர குருநினைவின், மங்கை மார்கள் பயில்பள்ளி வளமார் வைகுண் டப்பதியில் வண்மைச் சகல கலாவல்லி மாலைப் பரிசி ராயிரமே 21

கும்ப கோணம் கார்வேட்மன் குளிருஞ் சோறு வழங்கநிதி குறைவில் பன்னி ராயிரநங் குமரன் செந்திற் புனற்பந்தர், நம்பு நிதிமுப் பானைந்தா நயக்கு நூறு ராமேச நகரிற் பள்ளி நன்கொடைதா னுலா யிரத்தோ டிருநூறு, மிம்பர்த் திருலோக் கியிற்றொடக்க வினிய பள்ளிக் கீந்ததொகை யேற்ற வையா யிரமாகு மெங்கள் குமர குருநினைவா, லும்பர்த் தில்லை நித்தி யமா கேச பூசைக் குதவுநிதி யொருநூ ருயி ரம்பாவ நாசப் பதியி லுமைபாகன் 22

கோவில் மண்ட பங்கட்டக் கொடுத்த தேழைந் தாநூறு குளிரும் வாத வூர்க்கூத்தர் விமானப் பணிக்கு முப்பதுநூ, ருவ லுடனே யரித்துவா ரன்னம் வழங்கற் கன்பாயெட் டாயிரந்தென் குமரியினி லன்னம் வழங்க வெழுபதுநூ, றிவ தாகும் வைகுண்டத் தினிய தொடக்கப் பள்ளிக்கீ ரிரண்டா யிரமாங் கேதார விசர் கோயிற் றருமநிதி, மேவு மொருநூ ருயிரஞ்செங் கண்ணு னன்னம் பாலிப்பு விளங்கும் ராமே சப்பதியில் விரும்பு நாலா யிரமாமே 23

தேவர் சேக்கி ழாரன்னம் பாலிப் புக்குத் திருமயிலை திகழுங் குன்றத் தூர்ப்பதிக்குச் சேர்த்த திருப தாயிரநம், ஆவற் குமர குரு நினைவி லாவி னிரையைக் காப்பாற்ற வண்ணல் செந்திற் றிருப்பதியி லாமுப் பத்தை யாயிரமே, மேவு தில்லைக் குமரகுரு மேலார் நினைவிற் சோறளிக்க விளங்கு நிதியா நாலஞ்சா யிரங் கோப் பரிபா லனத்துக்கு, மூவர் மகிழுஞ் சுவாமிமலை முதிய பதிக்கு முப்பதென மொழியு மாயி ரங்கமலை முன்னுந் திருவா ரூர்ப்பதியில் 24

பள்ளி பயிலு மாணவிகள் பாங்கில் வதியுங் கட்டிடநற் பணிக்கு மூவா யிரமிதன்மேற் பலவா மறங்கள் புரிவதற்கு, வள்ள லெங்கள் காசிமடம் வாழ வந்து துறவொழுக்க மாசி லாத தவவொழுக்கம் வாய்ந்து கேதா ரேச்சுரனை, யுள்ளும் புறமுங் கண்டுவக்கு முரிமை யுடன்வாழ் அருணந்தி யொப்பின் முனிவர் திருவடியை யொருவா தென்றும் பரவுகின்றே, னெள்ளுந் திறத்தெ னொருநாவா லெடுத்துச் சொல்ல வியலாத வேற்ற முடைமை யினையறிந்து மேதோ வுரைத்தே னேற்கு மென்றே. 25

அடுத்த இதழில் மூன்றும் பகுதி தொடரும்

நலம் பெருகுக.

---

(முன் 554-ம் பக்கத் தொடர்ச்சி)

தையலோர் கூறு கொண்டசுந் தரமே,
சச்சிதா நந்தசிற் பரமே,
சம்பந்தர் கரத்தில் துலங்கிடும் மணியே,
சயம்புவாய் இலங்கிய கோவே,
செய்யநன் மணிகள் வான்உற எறியும்
திரைசெறி சண்டவா வியுமே
சிறந்திடும் தருமை வளர்சொக்க நாதச்
செல்வமே சிற்சுகோ தயமே." 9

(தொடரும்)

# நவராத்திரியும், நங்கையரும்

திருமதி. மூக்கம்மாள் பாலசுந்தரன் அவர்கள்,
ஆசிரியை N. M. உயர்நிலைப்பள்ளி, தாண்டிக்குடி. (கோடைமலை)

சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை என்று கண்ட மனிதன், மனித சமுதாயத்தை உண்டாக்கினுன். ஒருவருக்கொருவர் உதவிபுரிவது தங்கள் கடமையெனக் கருதினுன். உடல் வலியைப் பெருக்கினுல் மட்டும் போதாது, உளவலிமையைப் பெருக்க வேண்டும் என்று கண்டு உணர்ந்தான். உலகப்பற்றை விடுவதற்குப் பற்றற்ருன் பற்றினைப் பற்ற வேண்டும் என்றும், அதுவே பிறவியின் பயன் என்றும் கண்டறிந்தான். பலர் பலவிதமாக அழைக்கும் கடவுளை நினைந்து அனைவரும் ஒன்ருய்க் குலவவேண்டும் என்ற பரந்த நோக்கம் கொண்டான். இந்நிலையில் மக்களின் உள்ளத்திலே கடவுள் பக்தியை வளர்க்கக் கோயில்களும், திருவிழாக்களும், பண்டிகைகளும், இன்றியமையாதன என்று கண்டான். இதன் அடிப்படையிலே பல பண்டிகைகளும், விழாக்களும் கொண்டாடப்பட்டன. அவற்றுள் எல்லாம் மகளிர்க்காகவே நடத்தப்படும் பண்டிகைபோல் விளங்குவது நவராத்திரிப் பண்டிகையாகும்.

மனிதனின் உலக வாழ்விற்குத் தேவையான மூன்று முக்கிய பொருட்களாய் விளங்குவன, கல்வி, செல்வம், வீரம் என்பனவாம். அறிவும், ஆண்மையும், ஆஸ்தியும் பெற்ருன் ஒருவனுக்கு அவனியானது அமருலகினும் மேம்பட்டதாகும் அல்லவா? இம்முப்பொருட்களையும் தெய்வங்களாய் வழிபட எண்ணிய நமது ஆன்ருேர், இவற்றிற்கு அதிபதிகளாகப் பெண் தெய்வங்களைப் படைத்தனர். கலைமகள் கல்விக்கு அதிபதியாகவும், திருமகள் செல்வத்தின் தலைவியாகவும், துர்க்கை வீரமாதேவியாகவும், அன்றும், இன்றும், என்றும் தெய்வங்களாய் வணங்கப்பட்டு வருவது நாம் யாவரும் அறிந்ததே.

சற்று இக்கூற்றை ஆராயுங்கால் பெண்களுக்குரிய கடமையும், பொறுப்பும், ஆற்றலும் நன்கு விளங்கும். நல்லதோர் மைந்தனை ஈன்று புறந்தருதலோடு நில்லாது அவனைச் சான்றோனுக்கவும், உணவு முறையால் வீரனுக்கவும், வருவாயுள் காலம் கழித்து வாழ்வைச் செல்வத்தால் வளம்படுத்தவும் பெண்ணே காரணமாகித் துணைபுரிகின்ருள்.

சமயம் வருங்கால் தனது மென்மைத் தன்மையை மாற்றி எத்தகைய வீரச்செயலையும் செய்யத்துணிவாள் பெண் என்பதைக்கீழ்வரும் நற்றிணைப் பாடல் நன்குணர்த்துகின்றதன்றே!

“ இல்லெழு வயலை ஈற்று தின்றெனப்
பந்து நிலத்தெறிந்து பாவை நீக்கி
அவ்வயிறு அலைத்த என்செய்வினைக் குறுமகள்
மான்அமர்ப்பு அன்ன மையல் நோக்கமொடு
யானும் தாயும் மடுப்பத் தேனெடு
தீம்பால் உண்ணுள் வீங்குவனள் விம்மி
நெருநலும் அனையள் மன்னே! இன்றே
மையணல் காளை பொய்புகல் ஆக
அருஞ்சுரம் இறந்தனள் என்பதன்
முருந்தேர் வெண்பல் முகிழ்நகை திறந்தே.” (நற்றிணை)

நேற்றுவரை பசுவைக்கண்டால் பயந்து, பொம்மையை நிலத்திலே எறிந்துவிட்டு ஓடுபவளாயும், பாலும், தேனும் உண்ணுவதற்கு வற்புறுத்திஞல் அழுபவளாயும் இருந்த என் குழந்தைக்கு எவ்வாறு தன் காதலனுடன் தனியே செல்லத் தைரியம் வந்தது? என்று வருந்துகிருள் தாய். காலத்துக்கேற்ப வீரமும், துணிவும், அடையக் கூடியவர்கள் பெண்கள். எனவே அக்கிரமமான செயல்களைப்புரிந்த மகிடாசுரனை, கலைமகள், திருமகள், துர்க்கை ஆகிய மூவரும் கொன்றனர் எனப் புராண வரலாறு கூறுகின்றது.

புரட்டாசி மாதத்தில் வரும் மஹாளய அமாவாசைக்கு மறுநாள் முதல் நவமி வரை கொண்டாடப்படும் ஒன்பது நாட்களில், முதல் மூன்று நாட்கள் துர்க்கைக்கும், அடுத்த மூன்று

நாட்கள் திருமகளுக்கும், கடைசி மூன்று நாட்கள் கலைமகளுக்கும் பூஜைகள் நடத்தப்படுகின்றன. ஏனெனில் இம்மூவரும் முறையே மும்மூன்று நாட்கள் போரிட்டு ஒன்பதாம் நாள் மகிடாசுரனைக் கொன்றனர் என்பர். எனவே பத்தாவது நாளாகிய விஜயதசமியன்று வெற்றிவிழாக் கொண்டாடப்பட்டு விழா முடிவடைகிறது.

இவ்விழாக் கொண்டாடப்படும் பத்து நாட்களிலும், மங்கையர் தம் இல்லங்களை அணிபெறச் செய்து, கொலுப்பொம்மைகளை வரிசையாக அடுக்கி வைத்துக் கலைக்காட்சிபெற அமைத்து வைப்பர். ஒவ்வொரு நாள் மாலையிலும் இறைவனுக்கு விதவிதமான நைவேத்தியங்கள் படைத்து ஆதி அந்தமில்லா அருட்பெருஞ்சோதியை வழிபடுகின்றனர். இல்வாழ்வின் பயன் 'விருந்தோம்பி வேளாண்மை செய்தல் பொருட்டு' என்ற பொய்யா மொழியினை மறவாது தம் வீட்டுக் கொலுவினைப் பார்க்க வருமாறு அயலாரையும், உறவினரையும் அழைத்து, உண்பித்து மகிழ்விக்கின்றனர்.

தங்கள் குழவிகளுக்கு ஒப்பனை செய்து பலவகை வேடத்தில் அலங்கரித்து வீடு வீடாகச் சென்று மகளிரை மங்கலக் குங்குமம் கொடுத்து அழைக்கும் காட்சி மங்கையரின் மாண்பினை விளக்கும் மகிழ்வுறு காட்சியாகும். கொலுவினைக் காண வந்த மகளிர் பாடும் போதும், ஆடும் போதும், இசைக்கலையும் நடனக்கலையும் பெண்களுக்கே உரியன என்று பறை சாற்றுகின்றன.

எனவே இசைக்கலை, நடனக்கலை, சமையற்கலை, பொருட்கலை ஆகிய பலவகைக் கலைகளையும் வெளிக்காட்ட நவராத்திரிப் பண்டிகை உதவுகிறது. ஆகவே நங்கையரின் கலைத்திறனை வளர்க்கும் கலைவிழா நவராத்திரிப் பண்டிகையாகும். தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்வு இலாளாகிய பெண்ணுக்கு இயலாத காரியமும் இவ்வையத்தில் உண்டோ!

# கம்பன் கண்ட நாடும் மக்களும்

வித்துவான், திரு. வெ. சுப்பிரமணியன் அவர்கள்,
தமிழாசிரியர், ஸ்ரீ வெங்கடகிருட்டிண உயர்நிலைப்பள்ளி,
கணியூர், கோவை.

கவிச் சக்கரவர்த்தி என்றும், கல்வியிற் பெரியவன் கம்பன் என்றும் அறிஞர்களால் பாராட்டப் பட்டுள்ளவன் கம்பன். பலராலும் புகழ்ந்து கூறும் பெருமை பெற்ற கம்பர் தமிழகத்தில் சோழவள நாட்டைச்சார்ந்த திருவழுந்தூரில் பிறந்தார். சடையப்ப வள்ளலால் ஆதரிக்கப் பெற்றார். சோழ வள நாடு காவிரியால் வளம் பெற்ற நாடு. "சோணாடு சோறு டைத்து" என்று கூறத்தக்க பெருமை காவிரியால் வந்ததாகும். அத்தகைய நிலவளம், நீர்வளம் மிக்க நாட்டினைப் படைத்து அதற் கேற்ற மக்களையும் அமைத்துக் கூறும்பான்மை யாவரும் விரும்பத்தக்க தேயாகும்.

தமிழ்மொழி தன்னால் தெய்வவொளி பெற்றுத் திகழும்படி இராமகாதையைக் காவியமாகப் படைத்தான் கம்பன். அக்காவி யத்தை ஆதாரமாகக் கொண்டு மக்களின் முன்னேற்றத்திற் காவனவற்றை எல்லாம் கூறியுள்ளான் அவன். அவை எத்தனை எத்தனை புதிய காலங்கள் தோன்றினும் அவ்வெல்லாக் காலங் களுக்கும் ஏற்புடைத்தாகும். இனி அக்கம்பன் இராம காவியக் கோயிலில் கண்ட கோசல நாட்டையும், அந்நாட்டு மக்களைப் பற்றியும் காண்போம்.

"நாடு என்ப நாடா வளத்தன" என்றார் திருவள்ளுவர். ஒரு நாடானது இயற்கையான வளத்தோடு பொருந்தி, மக்க ளுக்குத் தேவையான உணவைக் கொண்டிருத்தல் வேண்டும். அங்ஙனம் இருந்தால் தான் நாடு சிறக்கும். நானிலங்களில்

உணவை மிகுதியாக அளிக்கும் நிலம் மருதமாகும். கோசல நாட்டில் மருதமாகிய விளைநிலமே மிகுதி. நிலவளத்தோடு நீர் வளமும் சிறந்து விளங்குவது கோசல நாடு. அந்நாட்டில் வெள்ள நீரானது பொழில்களிலும், சண்பகச் சோலைகளிலும், நந்தவனங்களிலும், பொய்கைகளிலும், தடாகங்களிலும், குருக்கத்திக் கொடிகளை வேலியாகக் கொண்ட கமுகந் தோட்டங்களிலும், வயல்களிலும் சென்று புகுந்தது என்று கவிஞர் கூறுவதிலிருந்து அந்நாட்டில் நீர்வளம் சிறந்திருந்தமை புலனாகும்.

அந்நாட்டில் தண்ணீர் தாவிப் பாயும் மடைகளிலெல்லாம் சிப்பிகள் நிறைந்திருப்பதால் வயல்களின் வரம்புகளிலெல்லாம் முத்துக்கள் நிறைந்துள்ளன. எருமை, நீரில் விழுந்து உழக்குகின்ற இடங்களில் எல்லாம் செங்கழுநீர் மலர்க்குவியல்கள் இருக்கின்றன. பரம்படித்துச் சமமாக்கிய வயலிடமெங்கும் பவழங்கள் உள்ளன. செந்நெற் பயிரிடமெங்கும் அன்னப் பறவைகள் வாழ்கின்றன. கரும்புகளிலெல்லாம் தேன் கூடுகள் உள்ளன. அழகிய சோலைகளிலெல்லாம் தேனுண்டு களிக்கும் வண்டுகளின் கூட்டங்கள் நிரம்பியிருக்கும். சங்குகளும், எருமைகளும், செங்கழுநீர் மலர்களும் நீர் வளத்தையும், நெல்லும், கரும்பும் மேலான நிலவளத்தையும் குறிக்கும். கம்பன் இப்பொருள்களைக் குறிப்பதன் மூலம் அந்நாட்டின் பல வளத்தையும் நமக்கு எடுத்துக் காட்டியுள்ளான்.

அந்த நாட்டில் எங்கு நோக்கினும் பரந்த வயல்கள்; அங்குமிங்கும் பரந்துகிடக்கும் நீர், அலைகளோடு விளங்குகிறது; கருங்குவளை மலர்கள் பூத்துக்குலுங்குகின்றன; குளிர்ச்சியான சோலைகளில் வசிக்கும் மயில்களெல்லாம் மேகத்தின் முழக்கத்தைக் கேட்டுத் தோகையை விரித்து ஆடுகின்றன. சோலைகளில் மதுவுண்ட களிப்பால் வண்டுகள் இன்னிசையைப் பாடுகின்றன. இங்ஙனம் இயல்பாக நிகழும் மருத நிலக்காட்சிகளைக் கம்பர் மிக அழகுபட வருணித்துக் கூறும் திறம் மிகக் களிப்பூட்டுவதாகும். மருதம் என்னும் அரசி பரந்த வயற்புறமாகிய அவைக்களத்தில் கொலு வீற்றிருக்கிறாள்; நீர் அலைகள், தொங்க விடப்பட்ட திரைச் சீலையாய் விளங்குகின்றன; தாமரைக் கொடிகளாகிய மகளிர் தாமரை மலர்களாகிய விளக்குகளை

ஏந்தி நிற்கின்றனர்; மேகங்கள் கூடி மத்தளச் சுதியைக் கூட்டிவிட்டன; வண்டுகள் மகரயாழினிசையை வாசிக்கின்றன; மயில்களாகிய நாட்டிய மகளிர் நடன மாடுகின்றனர். இந்தச் சபையில் மயிலின் நாட்டியத்தைக் கண்டு களிப்பவர் யாவர் என்று நினைக்கிறீர்களா? நூற்றுக்கணக்கான குவளை மலர் களாகிய கண்கள் அந்நாட்டியத்தைக் காண்பன போல வியந்து நோக்குகின்றன. இவ்வாறு கம்பன் அம்மருத நிலச்சிறப்பை நமக்குத் தெரியப்படுத்தியுள்ளான். அந்தப் பாடல்,

"தண்டலை மயில்க ளாடத் தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கள் முழவின் ஏங்கக் குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகரயாழின்
வண்டுகள் இனிது பாட மருதம் வீற்றிருக்கும் மாதோ."

என்பதாகும்.

அந்நாட்டின் மருத நிலங்களில் நெற்பயிர் செழித்து வளர்ந்து நெற் கதிர்கள் பழுத்துத் தொங்குகின்றன. இவ்வளவு செழிப்பாக நெல் விளைந்திருப்பதற்கு என்ன காரணம். நீருண்ட மேகம்போல நீரில் மூழ்கிக் கிடந்து வருகின்ற கரிய எருமைகள் தம் கன்றை நினைத்துத் தம் பாலைச்சுரந்து பெருக்க அந்தப்பால் ஒரு வெள்ளம் போலச் சென்று பாய்வதனுல் செந்நெல் செழித்து வளர்ந்து தழைத்துளது. மற்றும் எல்லா வீடுகளிலும் உலையில் போட அரிசியைக் கழுவிக் கீழே வார்க்கப்பட்ட கழுநீரினுடைய வெள்ளமானது பெருக்கெடுத்தோடிக்கமுகந் தோட்டத்தின்மூல மாகப் பாய்ந்து செந்நெல்லையும் வளர்த்துளது. இங்ஙனம் அந்நாட்டின் நெல் விளைவுக்குக் காரணம் எருமைகளும், விருந் தோம்புதலுமே காரணமாகும், என்று நயம்படக் கம்பர் கூறி யுள்ளார்.

ஒரு நாடு நல்ல நாடு என்று கூறப்படுவது அந்நாட்டின் வளப்பத்தையும், செல்வச் செழிப்பையும் கொண்டு மட்டும் அல்ல. நாடாக இருந்தாலும், காடாக இருந்தாலும், பள்ளமாக இருந்தாலும், மேடாக இருந்தாலும், எங்கே மக்கள் நல்லவர் களாய் யிருக்கிறுர்களோ அந்த நாடுதான் நல்ல நாடு. அங்கே தான் மக்கள் யாவரும் எல்லா இன்பங்களையும் எய்தி இன்புற்று

வாழ இயலும் அங்ஙனம் நாட்டில் உள்ள மக்கள் யாவரும் இன்புற்று வாழும் நாடே நல்ல நாடாகும். அவ்வாறு கோசல நாடு நன்னுடாகத் திகழக் காரணம் காட்டுகிருர் கம்பர். அந் நாட்டு மக்கள் குற்றங்களைச் செய்வதில்லை. அவர்கள் தங்கள் மனத்தில் நேர்மையைக் கொண்டிருக்கிருர்கள். மிகவும் மேலான தருமச் செயல்களையே செய்கின்றனர். அதனுல் அம்மக்கள் நன்னிலையையே அடைகின்றனர் என்று கவிஞர் கூறும் நன் மக்களைக் கொண்ட நாடே நன்னுடாம் என்பது தெள்ளிதின் புலனுகும்.

இனி அந்நாட்டில் வாழும் மக்களைப் பற்றிக் காண்போம். அந்நாட்டு மக்கள் அனைவரும் கற்க வேண்டிய நூல்களைக் கல்லாமல் இரார் என்று கவிஞர் கூறுகிருர். ஆகவே அந் நாட்டு மக்கள் அனைவரும் நன்கு கற்றவராகவே உள்ளனர் என அறிகிருேம். அந்நாட்டில் கல்வியில் (கற்ருர் கல்லாதவர்) என்று கூறத்தக்கவர் ஒருவருமிலர் என்று கூறுவதிலிருந்து அந்நாட்டு மக்களின் கல்வி நிலையை அறிந்து கொள்ளுகின்ருேம். ஒருநாட்டின் முன்னேற்றத்திற்கு அந்நாட்டின் கல்வி நிலையே காரணமாகும். மேலும் கல்வி ஒரு வித்துப்போன்றது. அவ்வித்தானது மக்கள் உள்ளத்தை நில மாகக்கொண்டு தோன்றும் ஆற்றல் அமைந்தது. அக்கல்வி வித்தானது முளைத்து மேலெழுந்து அளவற்ற கேள்விகளாகிய கிளைகளை வளரவிட்டு, அரிய தவமாகிய இலைகள் தழைத்து, அன்பாகிய அரும்பு தோன்றி, தருமமாகிய மலர் மலர்ந்து இன்பமாகிய ஒரு பழம் பழுத்தது போன்று விளங்குவது அந் நாடு என்று அழகுபடக் கூறியுள்ளார் கம்பர். தவம், அன்பு, தருமம், இன்பம் ஆகிய நான்கும் கல்வியாலே அமைவதாதலின் இங்ஙனம் பொருந்துமாறு கூறினுர் கவிஞர். எனவே கோசல நாட்டு மக்கள் சிறந்த கல்வி கேள்விகளுடையவர்களாய் விளங்கி அதன் காரியமாகிய தவம், அன்பு, அறம், இன்பம் ஆகியவைகளையுடையவர்களாய் விளங்கினர் என்ருர் கம்பர். வித்து, கிளை, இலை, அரும்பு, மலர், கனி என்ற இயற்கைப் பொருள்களை உவமங் காட்டிக் கல்வி, கேள்வி, தவம், அன்பு, அறம் இன்பம் என்னுமிவை மக்கட்கு உரியனவாக உருவகித்து உரைக்கும் கம்பன் நுண்ணறிவை யார்தாம் வியவார்? எனவே

கோசல நாட்டில் அனைவரும் நன்கு கற்றவராகவே உள்ளனர் என்றும், கற்றவர், கல்லாதவர் என்று கூறத்தக்கார் ஒருவரும் அங்கு இல்லை என்றும் கவிஞர் கூறியுள்ளார்.

"கல்லாது நிற்பார் பிறர்இன்மையின், கல்வி முற்ற
வல்லாரும் இல்லை; அவைவல்லர் அல்லாரும் இல்லை."

என்ற பாடல் அடியால் காட்டியுள்ளார்.

அந்த நாட்டில் பெண்டிரும் நிறைந்த கல்வியைப் பெற்றிருந்தனர். இக்கருத்தைத் தனியாக ஒரு பாடலில் கம்பர் கூறுகிறார். பெண் கல்வியில் இக்கவிஞனுக்கு இருந்த ஆர்வத்தை என்னென்று கூறுவது: பொருந்திய செல்வமும் கல்வியும் பெற்றிருந்தார்களாம் கோசல நாட்டுப் பெண்டிர்கள். "பொருந்து கல்வி" என்று கூறினமையால் அவர்கள் வாழ்க்கைக்கு உதவும் கல்வியைப் பெற்றுத் திகழ்ந்தார்கள் என்பதை அறிகிறோம். சிறக்கும் தன்மையுடைய கல்வி அம்மகளிரை அடைந்தமையின் மேலும் சிறப்பையடைந்தது என்னும் கருத்தும் உள்ளுறையாக அமையப் 'பொருந்து கல்வி' எனக் கம்பர் கூறிய நயமும் அறியத் தக்கதே. செல்வத்தின் பயன் ஈதலே என்பதற்கேற்ப அந்நாட்டு மகளிர் விருந்தினரை உபசரிக்கும் தொழிலையும், வறுமையால் வருந்தி வந்தோர்க்கு ஈதலையுமே தம் தொழில்களாகக் கொண்டிருந்தனர். ஆதலின் 'பொருந்து செல்வமும்' என்று நயம்படக் கூறினர் கம்பர். விருந்தோம்பலும், ஈதலுமாகிய இந்த இருசெயல்களும் உயர்ந்த பண்பாட்டைக் குறிக்கும். இத்தகைய பண்பாடு அவர்களுக்கு எங்ஙனம் கிடைத்திருக்கும் எனின் பொருத்தமான கல்வியினுல் என்பது புலனாகும். அப்பாடலைப் பார்ப்போம்.

"பெருந்த டங்கண் பிறைநுத லார்க்கு எலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யாவையே."

என்பதே அப்பாடலாகும்.

கேள்வி:- கல்விச் செல்வமானது கற்றல், கேட்டல் என்ற இருவகையால் பெறப்படுவதாகும். 'கற்றலிற் கேட்டலே நன்று'

என்ற பழமொழியாலும் கேள்விச் செல்வம் மிகச் சிறந்தது என அறிகிறோம். இவ்வாறு கூறக்காரணமும் உண்டு. ஒருவர் தானே முயன்று கற்கத் தொடங்கின் ஒரு கலையைக்கூட அவர் வாழ் நாளில் கற்க முடியாதுபோம். மற்றும் பரந்து பட்ட அறிவையும் அவர் பெறமுடியாது. கிணற்றுத் தவளையைப் போலிருப்பர். அஃதன்றி ஒருவர் பன்னெடுங்காலம் பயின்ற ஒன்றை மிக எளிதாக, சிறிது நேரத்தில் அறிந்து கொள்ளமுடியும். மேலும் பரந்துபட்ட அறிவு படைத்தவராய் விளங்குவர். அத்துடன் செவிவழிச் சென்ற செய்திகள் மறதிக்குள்ளாகாது, மறந்தாலும் மீண்டும் நினைவிற்குக் கொண்டுவரல் எளிதாகும். கேள்வி யறிவினைச் சிறிதளவு பெறினும் பயன் பெரிதாகும். இதனால் கேள்வி யறிவு, மக்கள் யாவருக்கும் வேண்டுமென்பதைக் கம்ப நாடன் கருதினான். இத்தகைய செவிவழிக் கல்வியை கோசல நாட்டு மக்கள் யாவரும் கொண்டிருந்தனர் என்று கம்பன் கூறுகின்றான்.

" பருந்தொடு நிழல் சென்றன்ன இயல் இசைப் பயன் துய்ப்பாரும்
மருந்தினும் இனிய கேள்வி செவியுற மாந்து வாரும்."

என்று சொல்லியுள்ளான்.

"பருந்துடன் அதன் நிழலும், தொடர்ந்து செல்லுதல் போல இயலை யொத்து வரும் இசைப் பயனை அவர்கள் அனுபவிப்பர்." மருந்தாவது அமிழ்தம் ஆகும். அமிழ்தம் நாவுக்கு மட்டுமே இனிக்கும். கேள்வியோ செவிக்கும் உள்ளத்திற்கும் இனிக்கும், அமிழ்தம் உண்ணும் போதுமட்டும் இனிக்கும், கேள்வியோ கேட்கும்போதும் எண்ணும் போதும் இனிப்பதோடு அறிவுணர்ச்சியுடன் கலந்து அழியாத் தன்மையைப்பெறும். ஆகவேதான் "மருந்தினும் இனிய கேள்வி" என்றார் கம்பர். அந்நாட்டு மக்கள் கேள்வி ஞானத்தைப்பெறப் பல சபைகள் அந்நாட்டில் இருந்தன என்கிறார் கம்பர். பல நாட்டுச் சிற்றரசர்களும் கொண்டு வந்து கொடுக்கும் கப்பப் பொருள்களை அளந்து கணக்கிடுகின்ற மண்டபம் ஒரு புறம். அன்னத்தைப் போன்ற அழகிய மென்னடையையுடைய மகளிர் ஆடுகின்ற நடன மண்டபம் ஒரு புறம். நினைத்தற்கும் அரிய அருமையான பெரு

மையையுடைய வேதங்களை ஓதுகின்ற மண்டபம் ஒரு புறம். கூறுதற்கு அருமையான பெருமை வாய்ந்த பல கலைகளை ஆராய்ச்சி செய்கின்ற பட்டி மண்டபம் ஒரு புறம்.அந்தப் பாடல்,

"மன்னவர் தருதிறை அளக்கும் மண்டபம்
அன்ன மென்னடையவர் ஆடும் மண்டபம்
உன்னரும் அருமறை ஓதும் மண்டபம்
பன்னரும் கலைதெரி பட்டி மண்டபம்."

என்பதாகும்.

ஓவியம், கட்டடம், சிற்பம், இசை, கவிதை முதலிய நுண் கலைகளிலும் அந்நாட்டு மக்கள் சிறப்புற்றிருந்தனர் என்று கம்பர் கூறியுள்ளார். ஒரு நாட்டின் கலை வளர்ச்சியை அறிவிப் பன அந்நாட்டு மொழியில் தோன்றிய கவிதைகளேயாகும். கவிதைக் கலையைப்பற்றி கம்பர் கூறுவன: கோசல நாட்டில் புலவர்கள் நிறைந்துள்ளனர். அவர்கள் சிறு நூல்களையும், பாடல்களையும் பாடுவதில் கவனம் செலுத்தவில்லை. பெருங் காப்பியம் பாடுவதிலேயே முனைந்துள்ளார்கள். அவர்கள் இயற்றும் கதைகள் கவிதைகளால் ஆக்கப்பட்டுள்ளன. புல வர்கள் கூறும் கதைகள் அனைத்தும் கவிதைகளாகவே உள்ளன என்றும், அக் கவிதைக் கனிகள் செவிக்கின்பத்தைத் தருகின்றன என்றும் கூறியுள்ளார். "காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்" என்று குறித்துள்ளார் கம்பர்.

அந்நாட்டு மகளிர்கள் உற்சாகமாகப் பந்தாட்டத்தை ஆடுவர் என்றுர் கம்பர். அந்நாட்டு இள மகளிர் பந்தாடு மிடம் சந்தன வனமல்ல; சண்பக வனமாம். சந்தனக் காடாயின் வண்டுகள் நிரம்ப இருக்கும், மகளிர் பந்தினை எறிந்து பிடிக்கும் போது, பந்தினை நோக்கும் கண்களைத் தங்களது துணையோ என எண்ணி வண்டுகள் அணைய வரும். உடனே கண்ணிமைகள் மூடிக்கொண்டு விடும். அதனால் பந்தைப்பிடிப்பதில் குற்றம் நேர்ந்துவிடும் என்று கருதி வண்டுறுத மலர்ச் சோலையாகிய சண்பக வனங்களுக்கே மகளிர் பந்தாடச் செல்வராம். முருகனை யொத்த இளங்குமரர்கள் தாங்கள் போர்க்கலை முதலியகலை

களைப் பயில்கின்ற இடம் மணம் வீசுகின்ற முல்லை வனமேயாம். நந்தன வனமல்லவாம். மக்கள் நடமாட்டமில்லாத முல்லைக் காடுகளிலேதான் காளையர் போர்ப்பயிற்சி செய்வார்கள் என்று உரைத்துள்ளார் கம்பர்.

"பந்தினை இளையவர் பயில்இடம் மயில்ஊர்
கந்தனை அனையவர் கலைதெரி கழகம்
சந்தன வனம்அல சண்பக வனமாம்
நந்தன வனம்அல நறைவிரி புறவம்."

என்பதே அந்தப்பாடல். ஒரு நாட்டின் மக்கள் செம்மையான வாழ்க்கையைப் பெற விளையாட்டும் இன்றியமையாதது. வாழ்க்கையின் உயர்ந்த பண்பாடுகள் விளையாட்டின் மூலமாக உண்டாதலை அறிந்த கம்பர் விளையாட்டையும் கூறியுள்ளார். எதையும் விளையாட்டாகச் செய்வது சிறந்தது என்பர் பெரியோர். சிட்னி கால்வின் என்ற மேனுட்டு அறிஞரும் "விளையாட்டாகச் செய்வதே கலை" என்றும் கூறியுள்ளார்.

அந்நாட்டு ஆடவரும் மகளிரும் அன்றலர்ந்த மலர்களை மாலையாகத் தொடுத்து அணிகின்றனர். அவர்கள் அணிந்துள்ள மலர்மாலையில் உள்ள தேனை வண்டுகள் குடித்து உறங்கு கின்றன. அவர்கள் அல்லும் பகலும் செல்வப் பொருளுக்கு அலைந்து கொண்டே யிராமல் போது மென்ற மனமுடைய வராய் இருந்தார்கள். அதனுல் தான் வண்டுகள் அவர்கள் அணிந்துள்ள மாலைகளில் உறங்குகின்றன என்ருர் கவிஞர். அவர்கள் தாம் பெற்ற செல்வத்தை வைத்துக் கொண்டு இன்ப வாழ்க்கையை நடத்தினர். அவர்கள் போது மென்ற மன முடையவராதலின் மேலும் மேலும் பொருள் தேட வேண்டும் என்று முயலாதவர்களாய் இருந்தார்கள். அவர்கள் ஓயாது பொருள் தேடுதலையே கொண்டிருந்தால் செல்வி ஒவ் வொருவரிடமும் செல்ல வேண்டியிருக்கும். அப்போது அவளுக் குத் தாமரையில் உறங்க நேரமிருக்காது அல்லவா? அந்நாட்டு மக்கள் மேன்மேலும் செல்வத்தை ஈட்டவேண்டிய நிலையில் வாழாது நிறைந்துள்ள செல்வத்தைக் கொண்டு போதுமென்ற மனமுடையவராய் வாழ்ந்ததால்தான் "தாமரை உறங்கும்

செய்யாள்" என்றார் கம்பர். மக்கள் வாழ்க்கையில் கொள்ள வேண்டியது அமைதியே என்பதையும் புலப்படுத்தியுள்ளார் கம்பர். எனவே கோசல நாட்டு மக்கள் செல்வத்தில் மன நிறைவு பெற்று இன்பவாழ்வு வாழ்ந்தனர் என்பதைத் தெளிவு படுத்தியுள்ளார்.

மேலும் அந்நாட்டு மக்களிடையே வறுமையில்லாததால் கொடைச்சிறப்புத் தெரிவதில்லை; போர் இல்லாமையால் வலிமை தெரிவதில்லை; பொய் இல்லாமையால் உண்மையின் சிறப்புத் தெரிவதில்லை; யாவரும் கேள்விஞானம் உடையவராயிருப்ப தால், அறிவின்மை இல்லையென்று கம்பர் கூறிய அம்மக்களின் உயர் வாழ்வை என்னென்போம். அம்மக்கள் யாவரும் கற்றவ ராயுள்ளனர் என்று கூறினால் குறைபாடு உண்டாகும் என்று எண்ணிய கம்பர் அவர்களிடம் அறியாமை (வெண்மை) இல்லை என்று கம்பர் நயம்படக் கூறினார்.

" வண்மை யில்லையோர் வறுமை இன்மையால்
திண்மை யில்லைநேர் செறுநர் இன்மையால்
உண்மை யில்லைபொய் யுரையிலா மையால்
வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால் "

என்பது அந்தப் பாடல்.

கோசல நாடு நல்ல நாடு என்றும், அந்த நாட்டில் வாழ்ந்த மக்கள் அனைவரும் சிறந்த கல்வி நிறைந்த கேள்வி ஞானத்தால் விளக்கமுற்று உயர்ந்த பண்பாடும் நாகரிகமும் பெற்றிருந்தனர் என்பதும் விளங்கக் காண்கிறோம். கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பநாடன் கூறும் மக்கள் சமுதாயமே எக்காலத்திலும் நாட்டில் நிலவவேண்டும். அந்நாடே உலகில் உயர்ந்த நாடாம், நன்றுடாம்.

கம்பன் புகழ் வாழ்க.

# மனமும் மனிதனும்

திரு. அ. முருகநாதன் அவர்கள்,
ஸ்ரீராமகிருஷ்ண இல்லம், பள்ளபாளையம்

### உயிர்களுள் உயர்ந்தவன்

உலகில் வாழும் உயிர்கள் அனைத்தினும் உயர்ந்தவன் மனிதன். மானுடப்பிறவியே எல்லாப் பிறப்புகளிலும் மேம்பட்டதாகும். இதனிலும் மேம்பட்டது இல்லை என்று பகரலாம். இது கருதியே "ஔவைப் பிராட்டியும் அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது" என்று அருளியுள்ளார். இத்தகைய உயர்வான பிறவியைப் பெற்றுள்ளவனது வாழ்வும், குறிக்கோளும் உயர்வுடைய தாகவே இருக்கவேண்டும். மனிதனுக்கு உயர்வு எதனால் வருகிறது? அவனை ஏன் ஏனைய உயிர்களினும் உயர்ந்தவனாக் கருத வேண்டும்? இது ஒரு கேள்வி. விலங்கினங்கள் அனைத்தும் நீண்டும், பருத்தும் வளர்கின்றன; ஆனால் மனிதன் மட்டும் உயரமாக வளருகின்றான்; ஆதலால் அவன் ஏனைய உயிர்களினும் உயர்வுடையவனாக் கருதப்படுகின்றான் என்று சிலர் கூறுவர். அவ்வாறெனின், தென்னை, பனை, தேவதாரு முதலிய ஓரறிவுடைய மரங்கள் மனிதனைக் காட்டிலும் பன்மடங்கு உயரமாக வளர்கின்றன; அதனால் அவைகள் மனிதனினும் உயர்வுடையதாகக் கருதப்பட வேண்டும்; ஆனால் அவைகள் அவ்வாறு கருதப்படுவதில்லை. ஆதலால் உயரமாக வளர்வதனால் மட்டும் மனிதனுக்கு உயர்வு வந்து விடாது. பின்னை எதனால் வருகிறது என்னின் கூறுதும்.

ஐம்பொறிகளை உடையவைகள் விலங்கினங்கள்; அதனால் அவைகள் ஐயறிவுடையன. விலங்கினங்களின் அறிவு பகுத்துணர்வோடு கூடாமல் உலகத்துப் பொருள்களை மட்டும்

அறியும் மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் ஐம்பொறி களோடு பொருந்திச் செயல்படுகின்றது. ஆதலால் அவைகள் தமக்குப் பசியெடுத்த காலத்து உண்டு, உறங்கி, இனவிருத்தி செய்வதோடு தங்களது வாழ்வை முடித்துக் கொள்ளுகின்றன. இங்ஙனம் விலங்கினங்களின் அறிவு புறப்பொருள்களை மட்டும் அறியும் சிற்றறிவாய் இருத்தலினால், அவைகள் நாடும் இன்பமும் சிற்றின்பமாய்த் தோன்றி மறைவதாய் இருக்கின்றது.

மனிதனும் ஐம்பொறிகளைப் பெற்றுள்ளான். அவற்றுடன் சிறப்பாக "மனது" என்னும் ஆறுவது பொறியொன்றையும் பெற்றிருக்கின்றான். அதனால் அவன் ஆறறிவு உடையவன் எனப்படுகின்றான். மனிதனிடத்துள்ள அறிவானது, ஐம்பொறி களால் அறியப்படும் புறப்பொருள்களைத் தமது அகத்தே கொண்டு சென்று ஒவ்வொன்றையும் நன்றிது தீதிது; இது செய்யத்தக்கது, இது செய்யத்தகாதது என்று பகுத்தறியும் தன்மையது. இவ்வாறு ஒவ்வொரு பொருளையும் பகுத்தறியும் பேரறிவைப் பெற்றிருப்பதனால் மனிதன் பகுத்தறிவுடையவன் எனப்படுகின்றான். அறிவிற்கு இலக்கணங் கூறப்போந்த "செந்நாப் போதாரும்,

> "சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ
> நன்றின்பா லுய்ப்ப தறிவு." (குறள் 422)

என்று உரைத்திருப்பது ஈண்டு நினைவு கொளத் தக்கதாகும். ஏனைய உயிர்களினும் மனிதனை உயர்வுடையவன் என்று பிரித்துக் காட்டுவது அவனிடத்து அமைந்துள்ள அறிவு வடிவான மனதேயாம். மனது பண்படும் அளவிற்கு மனிதன் மேலோனாகின்றான். மனது கீழ்மையுறும் அளவிற்கு மனிதன் கீழோனாகின்றான். ஆதலால் மனதைப் பண்படுத்துவதே மானுட வாழ்வின் குறிக்கோள் என்று பகரலாம்.

### மனத்தின் இயல்பு

மனது ஓயாது அலையுந் தன்மையது. அது கணப்பொழு தேனும் சும்மா இருக்காது. அது வேகம் மிகவுடையது. சுறு சுறுப்புடன் செயல் புரிவதே அதன் இயல்பாம். அதன் இயல் பைத் துள்ளித் திரியும் புள்ளிமானோடும், தாவித்திரியுங் குரங்

கிஞேடும் ஒப்பிடுவர் ஞானியர். அதனை அடக்குதல் என்பது எளிதான செயலன்று; செயற்கரிய செயல்களை யெல்லாம் செவ் வனே செய்து முடிக்கலாம்; ஆனுல் சிந்தையை அடக்கிச் சும்மா விருத்தலென்பது அரிதான செயலாகும். இதனை மாதவ ஞானியாந் தாயுமானவர்,

"கந்துக மதக்கரியை வசமா நடத்தலாங்
கரடிவெம் புலிவா யையுங்
கட்டலா மொருசிங்க முதுகின்மேற் கொள்ளலாங்
கட்செவி யெடுத்தாட் டலாம்
வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண் ணலாம்
வேருெருவர் காணும லுலகத்து லாவலாம்
விண்ணவரை யேவல் கொளலாஞ்
சந்ததமு மிளமையொ டிருக்கலா மற்ருெரு
சரீரத்தி னும்புகுத லாஞ்
சலமே னடக்கலாங் கனன்மே லிருக்கலாந்
தன்னிகரில் சித்தி பெறலாஞ்
சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற
திறமரிது சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந் தமே."

என்னும் பாடலால் மனதை அடக்குதலின் அருமையைத் தெளி வாகப் படம் பிடித்துக் காட்டுகின்ருர். மானுடன் ஒருவன் நுண்ணிய நூல்கள் பல கற்றிருக்கலாம். பல் கலைப் பண்டித னென்றும், பன்மொழிப் புலவனென்றும் பல்லோராலும் போற்றிப் பாராட்டப் படலாம். அன்னவனுக்கும் மனத்தை வெல்லுதல் என்பது அரிதான செயலேயாம். இதனை வள்ளுவப் பெருந்தகையார்,

"பலநல்ல கற்றக் கடைத்தும் மனநல்லர்
ஆகுதல் மாணுர்க் கரிது." (குறள் 823)

என்னுங் குறளால் தெள்ளத் தெளிய விளக்குகின்ருர். மனத்தின் இயல்பைக் குறித்துப் பகவான் இராமகிருஷ்ண பரம அம்சரும்

"மனம் நீகிரோவின் தலையிலுள்ள சுருட்டைமயிருக்குச் சமானம், அதை இழுத்துப் பிடித்திருக்கும் வரையில் நீளமாயிருக்கும். ஆனால் பிடிப்பை விட்டதும், பழையபடி அதுசுருண்டுவிடுகிறது. அதுபோல, மனம் பலவந்தமாக அடக்கி நிறுத்தப்பட்டிருக்கும் வரையில் நன்ருய் வேலை செய்து நற்பயன் விளைவிக்கும். ஆனால் சற்று எச்சரிக்கைக் குறைவு ஏற்படுமானல் உடனே அது சன்மார்க்கத்தை விட்டு விலகி விடும்" என்று பகர்ந்துள்ளார்.

### மாபெரும் வெற்றி

அலெக்ஸாண்டர், நெப்போலியன் போன்றவர்களை மா பெரும் வீரர்களென உலகம் போற்றுகிறது. உண்மையிலேயே அவர்கள் மாபெரும் வீரர்களா? அவர்கள் அடைந்த வெற்றி தான் மாபெரும் வெற்றியா? என்பதை நடுநிலைநின்று நன்கு ஆராய்வோமாயின் இல்லை யென்றுதான் கூறவேண்டும். உல கத்தார் காட்சிக்கு அன்னவர் மாபெரும் வீரர்களாகத் தென்பட லாம். ஆனால், எவ்வுயிரையும் தன்னுயிர் போல் காணும் செந் தண்மை மிக்க அந்தணாளர் காட்சிக்குக் கோழைகளாகத் தான் தென்படுவர். அலெக்ஸாண்டரையே எள்ளி நகையாடிய ஞானி யார் பண்டு பாரதத்தில் வாழ்ந்தார். தன் உள்ளத்தைப் பற்றிப் பிடித்துப் பேய்போல் ஆட்டிய பேராசையை வெல்ல இயலாத அவர்களை மாபெரும் வீரரென்று எவ்வாறு போற்றுவது? "ஒரு படைத்தலைவன் ஒரு நாட்டை வெல்லுதற்கு முன்; முதலில் தன்னைத்தான் வெற்றி கொள்ள வேண்டும்" என்கிறார் ஓர் மேலைநாட்டு அறிஞர். "வெற்றிகளில் எல்லாம் மாபெரும் வெற்றியாவது தன்னைத்தான் வெல்லுதலே" என்கிறார் கிரேக் கத் தத்துவஞானி பிளேட்டோ. உலகிலே இரண்டு சக்திகள் உள்ளன; ஒன்று ஆத்மசக்தி; மற்றொன்று வாளின் சக்தி; இவ்விரண்டினுள் நாளடைவில் ஆத்மா, வாளை வென்றே தீரும். என்று நெப்போலியனே கூறுகின்றான். மேற்கூறியவற்றி னின்றும் மனத்தை வெல்லுதலே மாபெரும் வெற்றியென்பது நன்கு புலனாகின்றதல்லவா?

### அறமாவது மனத்தூய்மையே

மனிதவர்க்கம் புரிகின்ற குற்றங்கள், தவறுகள் அனைத் தும் திரிகரணங்களுள் அடங்கும். திரிகரணங்களாவன—மனம்,

மொழி, மெய் என்பனவாம். இவற்றை உள்ளம், உரை, செயல் என்றும், மனம், வாக்கு, காயம் என்றும் கூறுவர். இம்முக் கரணங்களுள் மனத்தால் நிகழுங்குற்றங்களாவன;- அழுக்காறு, அவா, வெகுளி, வெஃகல், பொல்லாக்காட்சி முதலியன வாம். மொழியால் நிகழுங் குற்றங்களாவன—பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என்பனவாம். மெய்யால் நிகழுங் குற்றங்களாவன:- கொலை, களவு, பிறர்மனை நயத்தல், பிற வுயிர்களுக்கு இன்னுசெய்தல் முதலியவாம். மானுடன் புரியும் தீவினைகளை மணிமேகலையில்,

"தீவினை யென்பது யாதென வினவின்
ஆய்தொடி நல்லாய் ஆங்கது கேளாய்
கொலையே களவே காமத்தீ விழைவு
உலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்சொல்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
வெஃகல் வெகுளல் பொல்லாக்காட்சி யென்று
உள்ளம் தன்னில் உருப்பன மூன்றும் எனப்
பத்து வகையால் பயன்தெரி புலவர்- இத்திறம்படார்."

எனச் சாத்தனுர் செப்புகின்றுர். முக்கரணங்களில் மனக்குற்றம் நீங்கிய வழி ஏனைய இருவகைக் குற்றங்களும் தானே அடி பட்டுப் போகின்றன. எவ்வாறெனின்; ஐம்பொறிகளையும் செயல் புரிவிப்பது மனமேயாகும். மனமானது ஐம்பொறி களோடும் பொருந்தாத விடத்து ஐம்பொறிகளும் செயலற்றுச் சும்மா கிடக்கின்றன. மனமானது கண்களோடு பொருந்திக் காணுதற்கரிய அழகான காட்சியைக் காணுமிடத்துக் காதுக்கு ஓசை கேட்பதில்லை. அவ்வாறே மனமானது செவிகளோடு பொருந்தி இனிய ஓசையைக் கேட்குமிடத்துக் கண்கள் ஒன்றை யுங் காணுவதில்லை. எனவே ஐம்பொறிகளால் நிகழ்த்தப்படும் காரியங்கள் அனைத்திற்கும் மனமே காரணமாக இருக்கின்றது. காரணமாகிய மனம் தூய்மையுறுங்கால், ஐம்பொறிகளைக் கொண்டு நிகழ்த்தப்படும் காரியங்களும் தூய்மை யுறுகின்றன. அவ்வளவில் தூய்மையான செயல்கள் அனைத்தும் அறவினைகள் ஆகின்றன. மனத்தூய்மையின்றிச் செய்யப்படும் செயுல்கள்

அனைத்தும் அறவினைகளாகா. எவ்வாறெனின்; ஒருவன் பொருள் பெறக்கருதி இருவர்பால் சென்ருன். அவ்விருவருள் ஒருவன், இவன் வந்துவிட்டானே! இவனுக்கேதேனும் தர வேண்டுமே! தொலைந்துபோகட்டும் என்னும் எண்ணத்துடன் சிறிது பொருள் தருகின்ருன். மற்றவன் பொருள் ஏதும்தர வில்லை யாயினும்; "நலம்பல பெற்றுப் பொலிகநின் வாழ்வு" என உளமார வாழ்த்துகின்ருன். இவ்விருவருள் யாருடைய செயலை அறவினை யென்பது? உலகத்தவர் காட்சிக்கு முன்னவன் செயல் அறவினைபோல் தோன்றலாம். ஆனுல் உண்மையில் அறவினையாவது பின்னையவன் செயலேயாம். அறமாவது ஒருவன் தரும் பொருளைப் பொருத்ததன்று; தருபவனின் மனத்தின் இயல்பை; மனத்தூய்மையைப் பொறுத்ததேயாம். இதனை

"உதவி வரைத்தன்று உதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து" (குறள். 105)

"முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானும்
இன்சொ லினதே அறம்" (குறள். 93)

என்னுந் தமிழ் மறைகளானும் நன்கு அறியலாம். அறத்திற்கு இன்றியமையாது வேண்டப்படுவது மனத்தூய்மையே. மனத் தூய்மையே அறம் என்றும் பகரலாம். அதனுல்தான் தெய்வப் புலமைத் திருவள்ளுவரும்,

"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற." (குறள். 34)

"அழுக்காறு அவாவெகுளி இன்னுச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம்." (குறள்.35)

என்னுங் குறள்மணிகளால் "அறமாவது மனத்தூய்மையே" என்பதனை நன்கு வலியுறுத்துகின்ருர். மனம், மொழி, மெய் ஆகிய மூன்றும் தூய்மையுற்ற நிலையே இறைவனை அடைதற்கு ஏற்ற நிலையாம்.

"உள்ளம் உரை செயல்
உள்ள இம் முன்றையும்

உள்ளிக் கெடுத்து, இறை
உள்ளில் ஒடுங்கே.''

என்னுந் திருவாய்மொழியும் ஈண்டு நினைவுறற் பாலதாகும்.

## எண்ணங்களின் ஒழுங்குபாடு

நமது மனம் எண்ணமே வடிவெடுத்ததாக இருக்கின்றது. தூங்கும் வேளையைத் தவிர மற்றெல்லா வேளைகளிலும் எண்ணிய வண்ணமாகவே இருக்கின்றது. கடலின் மீது அலைகள் தோன்றி மறைவதைப்போல, நமது உள்ளத்திலும் பல்வேறு வகைப்பட்ட எண்ணங்கள் தோன்றி மறைந்த வண்ணமாயிருக்கின்றன. அலைகளற்ற நிலையையே "கடலின் அமைதி" என்று பகருகின்றோம். அதேபோல எண்ணங்கள் ஏதுமற்ற நிலையையே "பூரண மனவமைதி" என்றும் மொழியலாம். ஆனால் நமது உள்ளத்திலோ! ஓயாது குருக்ஷேத்திர யுத்தம் நடந்த வண்ணமாயிருக்கின்றது. தீமையைப் புறக்கணித்து விட்டு நன்மைக்கு வெற்றியளிப்பதே குருக்ஷேத்திர யுத்தம். நல்லதும் தீயதுமான பலதரப்பட்ட எண்ணங்கள் நமது உள்ளத்தில் முகிழ்த் தெழுகின்றன. நாம் விரும்பாவிடினும் புல்லிய எண்ணங்கள் பல நமது அகத்தே புகுந்து விடுகின்றன. இதனைப் பழைய வாசனை என்று பகருவர் சான்றோர். எண்ணங்களை ஒழுங்கு படுத்த விரும்பும் நாம், முதலில் தூய எண்ணங்களையே எண்ணிப் பழக வேண்டும். இடையிடையே புல்லிய எண்ணங்கள் பல நமது அகத்தேதோன்றினும்அவைகளைப் பொருட்படுத்தாதுபுனிதமான எண்ணங்களையே எண்ணிவரல் வேண்டும். தீய எண்ணங்கள் தோன்றும் போதெல்லாம் இறைவனது திருநாமத்தை உச்சரிக்கலாம்; மனம் உருகிப் பிரார்த்திக்கலாம். அப்பொழுது தீய எண்ணங்கள் அடியோடு அடிபட்டுப் போகின்றன. வரம்பிலா ஆற்றலுடைய இறைவனது திருநாமத்தின் முன்னர் புல்லிய எண்ணங்கள் பொசுங்கிச் சாம்பலாகின்றன. இவ்வாறு நாடோறும் தூய எண்ணங்களை எண்ணியும் இறைவனைப் பிரார்த்தித்தும் வருங்கால் நமது உள்ளம் தூய்மை உறுகின்றது. அதோடு நமது மனமும் தூய எண்ணங்களின் உறைவிடமாக மாறியமைகின்றது. பின்னர் மறந்தும் தீய எண்ணங்கள் உள்ளத்தே எழுவதில்லை; மேலாம் எண்ணங்களையே மனமானது

எண்ணுகின்றது; நமது வாழ்வும் மேலாம் வாழ்வாக வடிவெடுக்கின்றது. "எண்ணமே வாழ்வு" என்பது எல்லோருக்கும் ஒப்ப முடிந்த ஒரு பேருண்மையாகும். நாம் இளமைப் பருவத்து எண்ணிய எண்ணங்களின் தொகுதியே தற்பொழுதைய நமது வாழ்வு; தற்பொழுது நாம் எண்ணும் எண்ணங்களின் விளைவாகவே நமது வருங்கால வாழ்வு அமையும். இதனை நாம் அனைவரும் நினைவில் வைத்துக் கொள்ளக் கடமைப் பட்டுள்ளோம். வாழ்வில் மேலாம் நிலையை எய்த விரும்புவார் அனைவரும் மேலாம் எண்ணங்களையே எண்ணக் கடமைப் பட்டுள்ளனர். எண்ணத்தின் வலிமையினுல் எதையும் சாதிக்கலாம். அதனுற்றுன் தெய்வப் புலமைத் திருவள்ளுவரும்;

"வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு". (குறள். 595)

"உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து" (குறள். 596)

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்" (குறள். 666)

என்னுங் குறள்களான் எண்ணத்தின் தூய்மையையும், அதன் வலிமையையும் வற்புறுத்துகின்ருர்.

மனதற்ற நிலை

எண்ணங்கள் அனைத்தும் ஒய்ந்தவிடமே "மனதற்ற நிலை" எனப்படும். அப்பொழுது கருவி கரணங்கள் அனைத்தும் ஒய்ந்து விடுகின்றன. ஐம்பொறிகளும் மனத்தினுள் ஒடுங்கிவிடுகின்றது. அகங்கார மமகாரங்களும், விருப்பு வெறுப்புக்களும் அறவே அற்றுப்போய் விடுகின்றன. நன்ருக உறங்கும் நிலையோடு அதனை ஒப்பிடலாம். ஆனுல் ஒரே ஒரு வேற்றுமை. மனதற்ற சமாதி நிலைக்குச் செல்லுபவன் மீண்டும் விழிப்பு நிலைக்கு வரும்போது "பூரண ஞானியாக" வருகிருன். ஆனுல் உறங்கச் செல்லும் முட்டாள் விழித்தவுடனும் முட்டாளாகவே இருக்கிருன். நல்ல உறக்கத்தில் அறிவு ஒடுங்கிவிடுகின்றது. மனதற்ற

நிலையிலோ அறிவு பேரறிவாக ஒளிவீசுகின்றது. விழிப்பு, கனவு, உறக்கம் ஆகிய மூன்றிற்கும் அப்பாற்பட்டதே மன தற்ற நிலையாம். இதனைத் "துரிய நிலை" என்றும் "நிர்விகல்ப சமாதி" என்றும் பகருவர். இதனை,

> "அறிவறி கின்ற வறிவு நனவா
> மறிவறி யாமை யடையக் கனவா
> மறிவறி வல்லறி யாமை சுழுத்தி
> யறிவறி வாகு மான துரியமே." (திருமந்திரம்)

என்னுந் திருமூலர் திருவாக்கானும் நன்கு அறியலாம். மன தற்ற நிலையில் மனத்தைப் பற்றியிருந்த பாசங்கள் அனைத்தும் அறவே அகன்றுவிடுகின்றன. எஞ்சியிருப்பது தூய பரிசுத்த நிலையேயாம். பதியை அடைய வொட்டாது தடுத்து வைத்த பாசம் நீங்கிவிட அதனை விடுத்துப் பசு, பதியை அடைகின்றது. அதாவது சீவன் தனது சீவபோதத்தை யிழந்து சிவனோடு இரண்டறக் கலக்கின்றது. இதனைச் "சிவசாயுச்சியம்" என்றும் பகருவர். இந்த மேலாம் நிலையை அடைதற்கே மெய்ஞ்ஞானியர் அனைவரும் ஒருமை மனதுடன் இறைவனை நினைந்து உருகினர். நெஞ்சம் நெக்கு நெக்குருக ஆடியும் பாடியும் அவனருளைப் பரிந்து வேண்டினர். அரும்பாடுபட்டுச் சாதனைகள் பல புரிந் தனர். மாதவ ஞானியாந் தாயுமானவரும் இந்நிலையை அருளுமாறு,

> "உள்ளதே போதுநா னுனெனக் குளறியே
> யொன்றைவிட் டொன்று பற்றில்
> பாசக் கடற்குளே வீழாமன் மனதற்ற
> பரிசுத்த நிலையை யருள்வாய்
> பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
> பரிபூர ணனந் தமே."

என்று தம்மைத் தடுத்தாட்கொண்ட சிரகிரிப் பெருமானிடத்துப் பரிந்து விண்ணப்பிக்கின்றார். மானுடர் அனைவரும் பெறுதற் கரிய மேலாம் பெருநிலை அதுவேயாம். அப்பெருநிலையை அடைவதே மானுட வாழ்வின் குறிக்கோளாகும். உலகில் மானுடர் உள்ளிட்ட அனைத்துயிர்களும் அப்பெருநிலையை (பரம்

பொருளை) நோக்கியே பயணம் செய்கின்றன. இதனை அறிந்த மேலோர் தங்களது தீவிர முயற்சியினாலும், உலகப் பொருள் களிடத்துப் பற்றின்மையினாலும், மனங்கசிந்த பிரார்த்தனையி னாலும், இடையருச் சாதனைகளினாலும் அப்பெருநிலையை விரை வில் அடைகின்றனர். ஏனையோர் பிறவிக் கடலுள் வீழ்ந்து கரைகாணாது தத்தளிக்கின்றனர். ஆ த லா ல், நாமனைவரும் அவனருளாலே அவன்தாள் வணங்கி அவனது திருவடியை அடைய அருள் புரியுமாறு ஒருமை மனதுடன் உள்ளம் உருகி இறைஞ்சுவோமாக.

"கடவுளே போற்றி யென்னைக் கண்டுகொண் டருளுபோற்றி
விடவுளே யுருக்கி யென்னை யாண்டிட வேண்டும் போற்றி
உடலிது களைந்திட் டொல்லை யும்பர்தந் தருளு போற்றி
சடையுளே கங்கை வைத்த சங்கரா போற்றி போற்றி."

மாணிக்கவாசகப் பெருமான்.

---

# அல்ல குறியீட்டில் அவள்

சைவப்புலவர் பண்டித,
திரு. அ. சிவசுப்பிரமணிய பிள்ளை அவர்கள்,
சமயச் சொற்பொழிவாளர், நாகர்கோயில்.

நம் தமிழ் மொழி தொன்மையும் மேன்மையும் உடையது. இது இலக்கண இலக்கியங்களைத் தன்னகத்தே கொண்டு உயர் தனிச் செம்மொழியாக விளங்குகிறது. தமிழ் மக்களின் பண்டைக் கால வாழ்க்கை முறைகளையும் ஒழுக்கங்களையும் விளக்கும் கருவூலங்களாக விளங்குவன சங்க இலக்கியங்களாகும். இத்தமிழ் மொழி பேசும் நாடு தமிழ் நாடு. திசையனைத்தின் பெருமையெல்லாம் வென்றது இம்மொழி. இதனைப் பாரத நாட்டின் தென்பாலுள்ள மக்கள் பேசிவருகிறார்கள். இதனால் தென்மொழிஎன்றும், மிகவும்தொன்மை வாய்ந்ததினால் தொன்மையான மொழி என்றும் விரிவுடை அறிஞர் விளம்பியுள்ளார். இத்தமிழ், சங்கமேறிய புலவர்களால் போற்றி வளர்க்கப்பட்டது. முச்சங்கத்திலும் போற்றிய முதுமொழியாகும். இதனையே ஔவையாரும் "சங்கத் தமிழ் மூன்றும் தா" என்று கேட்டதிலிருந்து சங்கத் தமிழ் பெருமையுடையது என்பது தெளிவாகிறது.

செழுந்தமிழ் அயல் மொழியின் துறைகளை வெல்லக் காரணமாக இருந்தவர்கள் புலவர் பெருமக்கள். ஏனென்றால் சங்ககால மிருந்தே புலவர்கள் வீற்றிருந்து தமிழைச் சீர்பெறச் செய்தார்கள். தமிழென்றால் இனிமையுடையது. அதனை அவர்கள் மேலும் இனிமையுடையதாக்கினார்கள். ஆகவே அது தீந்தமிழானது. அது எல்லா மொழிகளைவிடவும் சிறப்புடையதாகையினால் அது ஒப்பற்ற தமிழானது. புலவர்கள் பலர் அதனை ஆராய்ந்து வளப்பமாக்கியதினால் ஆய்ந்த தமிழாயிற்று. நான்மாடக் கூடலென்னும் மதுரையம்பதியில் வைத்து ஆராய்ந்த

திருல் கூடலில் ஆய்ந்த தமிழாயிற்று. இதனையே மணிவாசகப் பெருமான் "கூடலில் ஆய்ந்த ஒண் தீந் தமிழ்" என்று சிறப்பித்துள்ளார். இதனுல் தமிழின் பெருமையும் அதனைப் போற்றிக் காப்பதின் அவசியத்தையும் அறிந்து கொள்ள வேண்டும்.

இத்தகைய தமிழ் மொழி அகம் புறம் என இரண்டுவகையான துறைகளையுடையது. இதில் அகம் என்பது ஒத்த தலைவனும் தலைவியும் தம்முள்ளே ஊழ்வினையின் பயனுகத் தாமே எதிர்ப்பட்டுக் கூடும் ஒழுக்கம். இது இத்தகையதெனப் பிறருக்குக் கூற இயலாத தன்மையுடையது. இந்த அகத்துறை களவு, கற்பு என இருபிரிவுகளை உடையது. களவு மறைந்தொழுகும் ஒழுக்கம். ஆகவே இதனைக் களவொழுக்கம் என்பர். களவுக் காலத்தில் தலைவன் சென்று தலைவியோடு கூடுவதற்கு பல இடையூறுகள் நிகழும். அவை, தாய் உறங்காமலிருத்தல், நாய் உறங்காமலிருத்தல், ஊரில் விழாவின் பொருட்டு மக்கள் உறங்காதிருத்தல், காவலர் கையில் விளக்கினைக் கொண்டு சுற்றிவருதல், நிலா, பகல்போல் ஒளி வீசுதல் இன்னும் பறவையினங்கள் வேற்றுப் பறவை வந்த காலத்தில் அஞ்சிச் சப்தமிடுதல், இவை போன்று பலவாகும்.

தலைவன் தான் வருவதைத் தலைவிக்கு அறிவிப்பதற்குச் சில அடையாளங்களைச் செய்வான். அதனையறிந்து தலைவி குறிப்பிட்ட இடம் வந்து சேர்வாள். அதற்குக் குறியிடம் சேறல் என்பது பெயர். தலைவன் வந்ததற்கு அடையாளமாகப் பறவை ஒலி எழுப்புதல் தண்ணீரில் ஒலி எழுப்புதல் செய்வான். இதனைப் புள்ளொலி எழுப்பல், புனலொலி எழுப்பல் என்பர். இவைகளை யறிந்து தலைவி குறிப்பிட்ட இடம் வந்து சேர்வாள். இது பகற்குறி இரவுக் குறியென இருவகைப்படும். இது களவுக் காலத்தில் பலநாள் நிகழும். சில நாள் தலைவன் அறிவிக்காமல் வேறு காரணங்களினுல் நிகழ்வதுமுண்டு, இதனை அல்லகுறி என்று சொல்வர். அவை பறவை சிலவேளை ஒலியெழுப்புதலும், காற்றினுல் காய்பழம் இவை மரத்திலிருந்து கீழே விழவும் சில தண்ணீரில் விழவும் செய்யும். இதனைக் கேட்டுத்தலைவி தலைவன் வந்திருக்கிறுன் என்றறிந்து வந்து பார்த்து அவனைக் காணுமல் திரும்பிச் செல்வாள். இதனை இறையனுர் களவியலில் " அல்ல

குறிப்படுத்தலும் அவ்வயினுரித்தே, அவன் வரவறியும் குறிப் பினுன". என்று கூறியுள்ளார்.

இத்தகைய அல்லகுறி நிகழ்ச்சியைத் தெரிவிக்கும் செய்யு ளொன்று பின்னே கூறப்பட்டிருக்கிறது. மிகுந்த இருளையு டைய நள்ளிரவில் வானத்தில் நட்சத்திரங்கள் ஒளிவீசிக் கொண்டிருந்தன. அது விதானத்தட்டில் இரத்தினங்கள் பதித் தது போன்றிருந்தன. அந்தநேரத்தில் தலைவன் விளையாட் டிற்காகப் பிரிந்து சென்ருலும் வருந்தும் தலைவி, தலைவனை யெண்ணி வரவை எதிர்நோக்கித் துயிலாது படுக்கையில் விழித் துக்கொண்டிருக்கிருள். அவர் முன்னுள் கூறிய செய்திகளை நினைவில் கொண்டு புரண்டு கொண்டிருந்தாள். அவர் வந்து அன்பு செய்யவில்லையே! நான் விரும்பிக் கொண்டிருக்கிறேன். அவர் எண்ணம் ஏதோ! அவரை நினைக்கும் போதெல்லாம் பிரி வுத்துன்பம் சுடுகின்றதே. நாம் இருவரும் வேறல்ல என்று சொன்னுரே. அவர் என்னெஞ்சில் எப்போதும் இருக்கின்ருரே. அவரை இன்னும் காணவில்லையே. ஒருவேளை அவருடைய நெஞ்சில் நான் இல்லையோ, இருந்தால் அவர் வருவதாகச் சொன்னவர் வந்திருப்பாரே என்றெல்லாம் பலவாருக எண்ணி இன்பம்தரும் இரவுப் பொழுதில் துன்பம் அடைந்து கொண் டிருந்தாள். அவ்வேளை மாங்கனி முதிர்ச்சியினுல் உதிர்ந்து கீழ்விழவும், அதனுல் பறவையினங்கள் ஒலியெழுப்பிப் பறக்கவும் செய்தன. இதனைக் கேட்ட தலைவி மகிழ்வடைந்து தலைவன் வந்துவிட்டான் என்றெண்ணி மகிழ்வுடன் வந்து சேர்ந்தாள். ஆனுல் அங்கு அவள் உள்ளங்கவர்ந்த கள்வனைக் காணவில்லை. முன்னுள், நின்னைவிட்டுப் பிரியமாட்டேன், பிரிந்தால் உயிர் நிலைத்திராது என்றெல்லாம் கூறிய தலைவனைக் காணவில்லை. நாம் இரண்டு தலையையுடைய பறவை; ஆனுல் உயிர் ஒன்று என்று கூறிய தலைவனைக் காணவில்லை. ஆகவே தலைவனை யெண்ணி வருந்தி அன்பு செய்யவில்லையே என்று ஏங்கி அவன் பின் செல்லும் நெஞ்சையுடையவளாகத் திரும்பி அந்த அல்ல குறியையெண்ணித் தன்வீடு சேர்ந்தாள். இத்தகைய கருத்த மைந்த பாடல்கள் பல சங்க இலக்கியங்களில் பரக்கக் காண லாம். இக்காலப்புலவருடைய செய்யுள் இக்கருத்தைத் தெரி விப்பனவாக அமைந்துள்ளது. அது,

## குறிஞ்சி

(அல்லகுறியிட்டில் தலைவி எண்ணியது)

நளியிருள் கங்குலில் நல்யாமம் தன்னில்
ஒளியுடை வானம் மீனெடு செறிந்து
விதானத் தட்டில் விரவிய மணிகள்
விளக்கொளி போன்று விளங்கிட வெங்கும்
தீங்கனி மிகுந்த சீர்சால் படப்பையில்
மாங்கனி யொன்று முதிர்ந்து கீழ்விழப்
புட்கள் யாவும் புலம்பித் திரிய
இன்பம் ஈயும் இரவுப் பொழுதில்
புணர்ச்சி வேட்கையில் புன்கண் கொண்டு
கணமேனும் நீங்கின் கவலும் தலைவி
தனியே வந்து தன்னுயிர் வெற்பனைக்
காணது நின்று கலங்கிய வுள்ளமொடு
நின்னிற் பிரியேன் நினக்கே யருளுவன்
என்ற மாற்றம் ஏனோ மறந்தனர்
என்றே இயம்பி அவளும்
திரும்பினள் அந்த அல்லகுறி யெண்ணியே.!

---

# அற வாழ்வு

திரு. அ. ரவிந்திரன் அவர்கள்
கீழவயலூர்

---

இவ்விருபதாம் நூற்ருண்டில் வாழும் மக்களிற் பெரும்பாலோர் பொருள் நசையும், புகழ் நசையுங் கொண்டவர்களாகவே விளங்குகின்றனர். மிக்க செல்வமும், மிகுந்த சிறப்பும் பெற்றுத் திகழவே விழைகின்றனர். இதன் பொருட்டே உயிர் வாழ்வோர், எண்ணற்றவர் என்று பகரலாம். மக்களுள் அனைவரும் புகழை விரும்பாவிடினும், பொருளை விரும்புதலில் யாரும் பின்வாங்குவதில்லை. பொருளில்லையேல் உலகத்தவர் அவனை ஒரு பொருட்டாகவே மதியார். "பொருளிலார்க்கு இவ்வுலக மில்லை" என்கிருர் வள்ளுவப் பெருந்தகையார். தோன்றி மறையும் பொருள் இருந்தால் மட்டும் போதாது; பொருளுடன் புகழுமிருத்தல் இன்றியமையாதது. பொருள் இன்றிருக்கும் நாளைபோகும்; ஆனல் புகழ் அத்தகைய தன்று. நிலையில்லா இந்நிலவுலகின்கண் நிலைத்து நிற்பது புகழேயாம். இது குறித்தே திருவள்ளுவரும்,

> "தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
> தோன்றலின் தோன்ருமை நன்று" (குறள். 236)

என்று திருவாய்மலர்ந்தார். இவ்வாறு மக்களுக்கு இன்றியமையாத பொருளையும், பெரும்புகழையும் ஒருங்கே தரவல்லது எது? இதனை வள்ளுவரே கூறுகின்ருர்.

> "சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
> ஆக்கம் எவனே உயிர்க்கு." (குறள். 31)

என்பதே வள்ளுவர் கூற்று. சிறப்பையும், செல்வத்தையும் ஒருங்கே தரவல்லது அறம். அத்தகைய அறத்தினும் மக்க

களுயிர்க்கு உறுதுணை பயக்கவல்லது வேறு யாதுளது? என்பதே அக்குறள்கூறும் கருத்து. மானுடன் ஒருவன் தனது வாழ்வு முழுதும் அறநெறியினின்றும் வழுவாது ஒழுகுவானாயின், அன்னவன் நெடும் புகழும், நீண்ட ஆயுளும் பெற்று இந்நில மிசை நீடுவாழ்வான்.

இனி, அறவாழ்வு வாழ விரும்புபவன் திரிகரண சுத்தனாய் இருத்தல் வேண்டும். மனம், மொழி, மெய், மூன்றினும் மாசற்ற வனாய்; அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் ஆகிய குற்றங்கள் அற்றவனாய் இருத்தல் வேண்டும்.

"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற." (குறள் 34)

"அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம்." (குறள் 35)

என்னுங் குறள் மணிகள் ஈண்டு நினைவுகொளத் தக்கதாகும்.

அறவாழ்வு வாழ விரும்பும் மானுடன் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனாய் இருத்தல் வேண்டும். பிறவுயிர்களின் துன்ப நீக்கத்தின் பொருட்டுத் தன்னுயிரையுந் தத்தம் செய்யும் தகைமையனா யிருத்தல் வேண்டும். பசியால் வருந்தும் உயிர் களுக்கு உணவும்; உடை அற்றோர்க்கு உடையும், இடமற் றோர்க்கு இடமும் தன்னால் இயன்ற அளவு வழங்கும் வண்மை உள்ளங் கொண்டவனாயிருத்தல் வேண்டும். அறமென்று கூறப் படுவது யாதெனின்?

"அறமெனப் படுவது யாதெனக் கேட்பின்
மறவா திதுகேள்; மன்னுயிர்க் கெல்லாம்
உண்டியும் உடையும் உறையுளு மல்லது
கண்டதில்!"

என்று மணிமேகலையில் சாத்தனார் அறத்தினை வலியுறுத்து கின்றார். ஆதலால், அறவாழ்வு வாழ விழைபவன் பிறவுயிர் களுக்குத் தொண்டு செய்யும் அறவோனாயிருத்தல் வேண்டும். வறியார்க் கீயும் வண்மை யுள்ளங் கொண்டவனா யிருத்தல்

வேண்டும். தான் செய்யும் ஒவ்வொரு சிறு செயலையும் இறை வனது திருத்தொண்டாகக் கருதி இயற்றல் வேண்டும். அன்ன வனே இறைவனுக்குரிய சிறந்த பக்தனுவான். பக்தனெருவன் எத்தொழில் புரியினும் பாதகமில்லை; அதனுல் அவன் இழிந்தவனு கான். ஆனுல், அன்னவனின் மனம் மட்டும் எஞ்ஞான்றும் இறைவனையே சார்ந்திருத்தல் வேண்டும். " தண்ணீர்க் குடத்தைச் சுமந்து செல்லும் பெண்ணெருத்தி இரு கைகளையும் வீசிக்கொண்டு, அருகில் உள்ளோருடன் உரையாடிச் செல்லி னும், அவளது கவனம் மட்டும் தலைமீதிருக்கும் நீர்க் குடத்தின் மீதே இருக்கும். அதுபோன்று, பக்தனெருவன் எத்தொழில் செய் யினும் அன்னவனின் மனம் மட்டும் இறைவனையே சார்ந்திருத் தல் வேண்டும்." என்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் பகர்ந் தருளியுள்ளார். "எத்தொழில் செய்யினும் ஏதவத்தைப் படினும் முத்தர் மனமிருக்கும் மோனத்தே" என்றபடி; புலைத்தொழில் புரியினும் அன்னவனின் மனம்மட்டும்இறைவனையே சார்ந்திருப் பின் அவன் புலையனுகான். அன்னவனை அந்தணருள் உயர்ந்த வன் என்று பகரலாம். உடலால் தவம் முதலியன செய்து கொண்டு, மனம் கீழான ஆசாபாசங்களிற் சிக்கி உழலுமாயின்; அன்னவன் பிறப்பால் உயர்ந்தவனுயினும் இழிந்தவனேயாவான். அன்னவன் புறத்தூய்மையும், புறத்தழகும் உடையவனே யன்றி அகத்தூய்மையும் அகத்தழகும் உடையவனல்லன். அன்ன வனை அறியாத உலகமக்கள் போற்றுவர்; ஆனுல் அறிவிற் சிறந்த ஆன்ருேர்கள் அவனை எள்ளி நகையாடுவர். ஆதலால் புறத்தூய்மை, புறத்தழகினும் அகத்தூய்மையும், அகத் தழகுமே சாலச் சிறந்ததாகும். இதனை,

" குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல — நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு."

என்னும் நாலடியார் புறத்தூய்மையினும், அகத்தூய்மையே சாலச்சிறந்தது என்பதனை நன்கு வலியுறுத்துகின்றது.

அறவாழ்விற்கு அடிப்படைத் தூண்களாய் இருப்பவைகள் சமயங்கள். நமது நாட்டிற்கு முதுகெலும்பு போன்றது சமயம்.

நமது நாட்டிலுள்ள ஒவ்வொரு இயக்கமும் சமயச் சார்புடைய தாகவே இருக்கும். சமயமின்றேல் நமது நாடும், நாகரிகமும் அழிந்து ஒழியும் என்று துணிந்து கூறலாம். எத்துணையோ எதிர்ப்புகளுக்கும், இடுக்கண்களுக்கும் இடையில் பாரதம் தனது பழம் பெருமையுடன் திகழ்கிறதென்றால்; அதற்கு அடிப் படைக்காரணம் சமயமும், சமயம் சார்ந்த அற வாழ்வுமேயாகும்.

உலகில் வாழும் ஒவ்வொரு உயிரும் இன்பத்தையே நாடித் திரிகின்றன. துன்பத்தைக்காணின் தூரவிலகிச் செல்லுகின்றன. இது உயிர்களின் இயல்பாகும். இன்பத்தை நாடுதலில் மனித னுக்கும் மற்ற உயிர்களுக்கும் இடையில் ஒரே ஒரு வித்தியாசம் தான் உண்டு. மற்ற உயிர்களனைத்தும் உண்டு, உறங்கி, இன விருத்தி செய்வதில் இன்பங் காணுகின்றன. அவைகளின் இன்ப நாட்டம் அதோடு முடிவடைகின்றது. ஆனால், மனிதனோ! பல் வேறு துறைகளிற் சென்று இன்பத்தைத் தேடுகின்றான். பெரும் பொருளீட்டி அதைத் துய்ப்பதில் இன்பங்காணுகின்றா னொருவன். இலக்கியங்களை ஆய்ந்து, அதனுட்பொருளை யுணர்ந்து, அதனைப் பிறர்க் கெடுத்துரைப்பதில் இன்பங்காணு கின்றான் மற்றொருவன். மண்ணையும் விண்ணையும் துருவி ஆராய்வதில் இன்பங் காணுகின்றான் வேறொருவன். இவ்வாறு ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் துறையிற் சென்று இன்பங் காண விழைந்து இறுதியில் ஏமாற்றம் அடைந்தனர். தாங்கள் அரும்பாடு பட்டுக் கண்ட தெல்லாம் சின்னாட்களில் அழிந்து போகுந் தன்மையதாயிருத் தலைக் கண்டனர். பின்னர்; அழியாத இன்பத்தைத் தேடமுற்பட்டனர். அழியாத இன்பத்தைத் தரவல்ல தெது என்று தேடினர். ஆண்டவனை நாடிச் செல்லும் அற வாழ்வு வாழ்வது தான் அழியாத இன்பத்தை நல்கவல்லது என்பதையுணர்ந்தனர். அலையும் மனத்தை யடக்கி ஆண்டவ னிடம் செலுத்த முற்பட்டனர். இதனை முதன்முதலில் உணர்ந் தவர் நம்மவரேயாவர். இறைவழி பாட்டையும், இறைவனை அடைதற்குரிய செந்நெறிகளையும் வகுத்தனர். அவர்கள் அறிந்த அநம்பெரும் பேருண்மைகளைப் புகட்டுவதே சமயங்கள்.

உலகத்தில் மதங்களும், சமயங்களும் எண்ணிறந்தன வாகப் பரவி இருக்கின்றன. இந்தியாவிலும் சமயங்கள் பல உள்

ளன. இந்து மதத்தினுள் அடங்கியுள்ள சமயங்களை ஆறு பெரும் பிரிவுகளாகப் பிரித்துள்ளனர். அவை முறையே, சைவம், வைணவம், சாக்தம், கௌமாரம், காணபத்தியம் சௌரம் என்பனவாம். சமயங்கள் பலவாயினும் அவை புகட்டும் பேருண்மைகள் ஒன்றேயாம். வெவ்வேறு மதங்களும் கடவுளிடம் செல்லும் வெவ்வேறு வழிகளே என்பதை, "வேறு வேருன மதங்களெல்லாம் ஒரே ஈசுவரனை யடைவதற்கு வேண்டிய வேறு வேறு வழிகளே யாம். கல்கத்தாவிலுள்ள காளிகோயிலுக்குப் போகப் பல்வேறு வழிகள் உள்ளன. அதுபோல ஈசுவரனுடைய சந்நிதானத்துக்குச் செல்லும் மார்க்கங்களும் பலவுள்ளன. ஒவ்வொரு மதமும் மனிதனை ஈசுவரனிடம் கொண்டு சேர்ப்பிக்கும். அத்தகைய மார்க்கமேயன்றி வேறன்று" என்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் பகர்ந்துள்ளார். எந்த வடிவில் வழிபடுவார்க்கும் இறைவனருள் உண்டென்பதற்கு,

> "விரிவிலா அறிவினுர்கள் வேருெரு சமயஞ் செய்தே
> எரிவினுற் சொன்ஞு ரேனும் எம்பிராற் கேற்ற தாமே".

என்னுந் திருநாவுக்கரசு நாயனரின் திருமொழியே சான்ருகும்.

மனிதன் மனது என்னும் சிறந்த கருவியைப் பெற்றுள்ளான். மனது தூயதாகு மளவிற்கு மனிதன் மேலோனுகின்ருன். இன்ப துன்ப மனைத்திற்கும் மனதே மூலகாரணமாகின்றது. இன்பத்தைத் துன்பமாகக் காண்பிப்பதுவும், துன்பத்தை இன்பமாகக் காண்பிப்பதுவும் மனமேயாம். இதற்கு;

> "தீதும் நன்றும் பிறர்தர வாரா
> நோதலுந் தணிதலும் அவற்ருே ரன்ன." (புறம் 192)

என்னும் பூங்குன்றனரின் மெய்யுரையே சான்ருகும். மனத்தை வெல்லுமளவிற்கு மனிதன் ஆற்றல் மிகப் பெறுகின்ருன்; சிறந்த ஆத்ம சக்தியைப் பெறுகின்ருன். இறைவனை அடைவதற்கு மனத்தூய்மையே உற்ற உபாயமாகும். மனத்தை வென்று தூயதாக்குதல் எளிதான செயல் அல்லாவிடினும்; இடையருப் பயிற்சியினுலும், உலகப் பொருள்களிடத்துப் பற்றின்மையினுலும், மனங்கசிந்த பிரார்த்தனையினுலும், மனத்தை வெல்லலாம்.

"பூசிக்கும் போது புவனு பதிதன்னை
ஆசற் றகத்தினில் ஆவா கனம்பண்ணிப்
பேசிய பிராணப் பிரதிட் டையதுசெய்து
நேசுற் றிடவே தியான மதுசெய்யே." (திருமந்திரம்)

என்பது திருமூலர் திருவாக்கு. நாம் அனைவரும் நமது மனத்தைத் தூயதாக்கி, அம்மனத்தையே இறைவனுறையுங் கோயிலுமாக்கி அவ்விறைவனது நினைவையே தூபமாக்கி, நம் மாட்டு மிளிரும் அன்பு, ஆர்வம், முதலியவற்றையே மஞ்சன நீராகப் பெய்து, நம் அகத்துறையும் இறைவனையே இடையருது உள்ளம் உருகி வழுத்துவோமாக.

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானூர்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளாமணி விளக்கே."

(திருமந்திரம்)

---

# கேண்மை

புலவர். திரு. மு. ஆறுமுகம் அவர்கள்,
தமிழாசிரியர்,
மாவட்டக் கழக உயர்நிலைப்பள்ளி, பூவிருந்தவல்லி.

கேண்மை என்பதற்கு நட்பு என்று பொருள். நிலவுலகத்தில் நிலவும் உயர்திணை, அஃறிணை ஆகிய இருதிணை உயிர்களிடமும் நாம் இதனைக் காண்கிறோம்.

காட்டெருதுகள் நான்கு கூற்றம் நிகர்த்த சீயத்தை அடக்கின என்ற சிறுகதை ஒற்றுமையின் அடிப்படையாக எழுந்த நட்புணர்ச்சியை நமக்கு உணர்த்த எழுந்ததே ஆகும்.

எத்தகைய இயல்பு வாய்ந்தோரிடம் நட்புக்கொள்ள வேண்டும் என்பதை நம் தொன்னூல்கள் பல வரையறுத்தன வேனும் அவற்றுள் செந்நாப் புலவர் செய்து தந்த திருக்குறள் யாது கூறுகின்றது என்பதை நோக்குவோம்.

நாளும் நல்லவரின் நட்பையே கொள்ள வேண்டும். அல்லவரின் நட்பைத் தள்ளவேண்டும்; அவ்வாறு தள்ளுங்கால் அக்கீழோர் விரும்புவன கொடுத்தாவது அம்மக்களின் நட்பைக் கைவிட வேண்டும் என்று கூறவிரும்பிய வள்ளுவர்,

"மருவுக மாசற்றார் கேண்மை ஒன்றீத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு." (குறள். 800)

என்று கூறிச்செல்கின்றார்.

ஏது என்னையெனின், சான்றோரின் நட்பு இருமை எனப்பட்ட இருவகைப் பிறப்பின் கண்ணும் அல்லவை கடிந்து நல்லவை காட்டு மாகலான் மாசற்ற சான்றோரின் நட்பைப் பொருந்துக என்று கூறி, கீழ் மக்களின் நட்பு தீயவை பயக்கு

மாகலான் அதனைத் தீயினும் அஞ்சி, அவர் விரும்பும் பொருளைக் கொடுத்தாவது தொடர்பினை அறுக்க என்றும் கூறினர்.

மேலும் கீழ்மக்களின் தொடர்பை விலைமதிக்க வொண்ணு ஒப்பரிய பொருளை அல்லது பொருள்களைக் கொடுத்தாவது விடுக என்று கூறிய வள்ளுவர், சான்ரேரின் கேண்மையை யாதுகொடுத்தாவது அவரைத் தம்மவராக ஆக்கிக்கொள்க என்று கூற மறக்க வில்லை.

"குடிப்பிறந்து தன்கண் பழிநா ணுவானைக்
கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு." (குறள். 794)

என்று கூறுகின்ருர்.

உயர்ந்த குடியின் கண் பிறந்தாரைத் தம்பால் பழிவந்த விடத்து, அப்பழிக்கு நனி நாணுகின்றவருக்குப் பெறுதற்கரிய பொருள்கள் சில கொடுத்தாவது அவரைப் பொருந்த வேண்டும் என்று கூறுகின்ருர்.

இங்ஙனம், நல்லகுடியிற் பிறந்து தம் கண் உற்றபழிக்குப் பெரிதும் நாணுகின்ற பெருந்தகையோரின் நட்பைக் கொள்க என்றும், கயமைத்தன்மை வாய்ந்த கீழோரின் கேண்மையை நீக்குக என்றும் உரைத்த வள்ளுவர் அதற்குத்தக்க நல்ல ஏதுக் களையும் கூற மறந்தாரில்லை. அக்காரணங்களைக் கீழ்வரும் கருத்துக்களான் நாம் நன்குணரலாம்.

மேன்மக்கள் நட்பின் பரிசு எத்தகையது என்று நினையப் புகின், நட்பாயின சான்ரேர்க்கு நாம், எல்லைக்கண் அடங்காத் தொல்லைகள்தரினும், அவர்கள் நம்மாட்டுச் செலுத்தும் அன்பின் தன்மையிலிருந்து சிறிதும் மாறுபடமாட்டார்கள். இக்கருத்தை யுணர்த்தும் குறள்மணி,

"அழிவந்த செய்யினும் அன்பறுர்; அன்பின்
வழிவந்த கேண்மை யவர்." (குறள். 807)

இதன்பொருள் மணியிடைச்செல்லும் நூலென விளங்கினும் இக் குறளுக்கு இலக்கியமாய நட்பு இக்காலத்து உளதோ என்ற

ஐயப்பாடு அரும்புதல் யாவர்க்கும் இயல்பே யாகும். இதற்கு மறுதலையாய கீழோர் நட்பின் பரிசை உணர்த்தப் புகுந்த வள்ளுவர், யாவரும் தெள்ளிதின் உணரும் வண்ணம் உவமை கொண்டு உணர்த்துகின்றார்.

"அமரகத்(து) ஆற்றறுக்கும் கல்லாமா அன்னார்
தமரின் தனிமை தலை." (குறள். 814)

போர் மேற்செல்லும் பரியானது, வாதுவன் எண்ணங்களையும், போரின் நுணுக்கங்களையும் அறிந்ததாக இருக்க வேண்டும். இத்தகைய இயல்புகளை நன்குணர்ந்தும் தலைவனை வீழ்த்த வேண்டும் என்ற எண்ணம் கொண்ட அப்பரியினால், அவன் யாது பயன் அடைய முடியும்? பயனில்லாது ஒழிந்தாலும் தொல்லை இல்லை. தன்னுயிரையே கொல்லும் ஒரு கருவியாக விளங்கின், அடுப்பேற்றிய உலையில் தீயெழக்கண்ட மாதின் நிலையையே அவன் அடைவான் என்பது உறுதி. எனவே அமர் வாராதமுன்னம் உறவாயிருந்து, அமர்வந்தபின் எமனாக மாறுகின்ற குதிரையைப் போன்றாரின் நட்பினை அறுக்க என்று வள்ளுவர் எச்சரிக்கை முகத்தான் உணர்த்துகின்றார். அன்பின் வழிவந்து, என்பையும் ஈயும் மேலோர் நட்பைக் கொள்க என்றும், பயனுள்ளவரை நட்புச்செய்து பயன் மாறிய பின் விலகுகின்ற வண்டினுள்ளம் கொண்ட விலைமாது போன்றாரின் நட்பை விடுக்க என்றும் கூறுகின்றார். இதனையே,

"யானை அனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும் யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கும் நாய்."

என்று நாலடி வற்புறுத்தி உரைக்கின்றதைக் கண்டு நாம் தெளியலாம்.

யானையின் தன்மை வாய்ந்த மூர்க்கரின் கேண்மையைக் கொள்ளற்க; நாயின் நல்ல தன்மையைப் பெற்ற நல்லோரின் நட்பைப் போற்றுக; ஏனெனின் யானை தன்னைக் கழீஇ மாசு நீக்கி உணவிட்டுக் காத்த பாகனின் உயிரையே வௌவும்

தன்மை பொருந்தியது. ஏனையதாகிய நாயோ, தன்னை வளர்த்த அன்பிற்குரிய தலைவன்மேல் முழுநம்பிக்கை கொள்ளும் பண்பினைப் பெற்றது. மேலும் தன்னுயிரையே அவனிடம் அடைக்கலமாக ஒப்புவிக்கும். தன் தலைவன் சினத்தின் வயப் பட்டுச் சிறுமதிகொண்டு வேலால் தாக்கினும், அவன்பால் கொண்ட அன்பு அருமல் தன் அன்பைப் புலப்படுத்தும் பொருட்டு வால் குழைத்து நிற்கும் நல்ல குணம் வாய்ந்தது என்று கூறும் இந்நாலடியின் கருத்து, வள்ளுவப் பெருந்தகைக்கு விளக்க உரையாக அமைந்து நிற்பதை நாம் காணலாம்.

மற்றும் உண்மை அன்புகொண்ட பெரியோரின் நட்பு வளரும் தன்மை கொண்டதென்றும், அன்பின்மைகொண்ட பேதையாரின் நட்பே, கடிது அழியக்கூடிய தென்ற கருத்தில்

"நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு." (குறள். 782)

என்று கூறுகின்றார்.

பண்புடையாரின் நட்பு பிறை வளரும் பரிசே போன்று நாடோறும் நிறையும் தன்மை பெற்றது. அதற்கு மாறுனது மாசுடையார் நட்பு என்பதே இதன் பொருளாம். இதனையே,

"ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே."

"நூறாண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை
நீர்க்குள் பாசிபோல் வேர்க்கோள் ளாதே."

என்று பிற்காலத்தார் கூறியமை முன்னையதை வலியுறுத்த எழுந்தனவே என்பது போதரும்.

பண்புடையாளரின் நட்பு வளரும் தன்மை யுடையது மட்டுமன்றி, இனிமை நல்கும் திறமும் உடையது என்று கூறுகின்றார். எங்ஙனமெனின் நல்ல நூலானது கற்கும் தோறும் இன்பமும், நல்ல நூற்பொருளையும் தந்து நிற்பது போல் பெரியோர் நட்பிலும் ஆழமும், ஆக்கமும் ஒருகாலைக் கொருகால் பெருகக் கூடியது என்ற கருத்தினை,

"நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு." (குறள். 793)

என்ற குறளின் வாயிலாய் நமக்கு உணர்த்துகின்றூர். மேலும் அவர்களுக்குத் தேயம் இடையிட்டு வாழவேண்டி நேரினும், தம் முன்னேய நட்பினே மறவாமல் வாழ்வர் என்பதனே,

"புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்". (குறள். 785)

என்ற குறளினுல் தெளிவாக்கினுர். இக்குறளின் கருத்தை உன்னும்போது சான்றேர் இருவரின் நட்பு நினேவில் உறுகின்றது. அவ்விரு சான்றேரும் இருகண்களே நிகர்த்தவர்கள். ஒருவர், நாட்டு மக்களின் வாட்டத்தைப் போக்கி வளத்தைப் பெருக்கும் வில்லேர் உழவர். ஏனேயவர் மக்களின் எண்ணத்தை வெளியிடுகின்ற தூதாக விளங்கி, மாயாப் புகழ்கொள்ளும் கவிதையினேக் களஞ்சியமாகக் கொண்டு நிற்கும் சொல்லேர் உழவர். முன்னவர் கோப்பெருஞ் சோழர்; பின்னவர் பிசிராந்தையார் என்னும் பெயர் தாங்கிய பாண்டிய நாட்டின் கவினுர்.

இவ்விருவரும் வேறு வேறு நாட்டினர். முன்பின் பார்த்து அறியாதவர்கள். ஆயினும் இருவரும், ஒருவர் மற்றவரை உளமார விரும்பினர். அவ்வெண்ணத்தை நாடோறும் அன்பு நீர் பாய்ச்சி வளர்த்தனர். ஆர்வம் என்னும் எரு இட்டனர். இங்ஙனம் அவர்கள் நட்புப்பயிரை வளர்த்தனர்.

பெரும்புலவராக வாழ்ந்த பிசிராந்தையார் தம் நண்பராகிய கோப்பெருஞ் சோழனுக்கு இடுக்கண் உற்றது என்பதை உற்பாதத்தால் அறிந்தார். அறிந்த அப்புலவர், தன்னலம், தன் குடும்பம், தன்னுடு என்பதை மறந்து தம்நண்பரின் விழைவைத் தீர்க்க எண்ணி விரைந்தார். குன்றும், மலேயும் பின்னெழிய கானகமும், கானுறும் பல கடந்து வந்த ஆந்தையாரின் செயலேயும், அவர் வருவார் என்று தெள்ளிதின் உணர்ந்து அவரின் வருகையைத் தம்மைச் சூழ்ந்து நின்ற புலவர்களுக்கு உரைத்த சோழனின் மாண்பும், நினேக்குந்தோறும் நினேக்குந்தோறும் அவர்களின் உளமொன்றிய நட்பாழத்தைக்கண்டு, நம்முள்ளம் பெரிதும் வியப்பே உறுகின்றதன்றே?

அதனால் தான் வள்ளுவர், உணர்ச்சி ஒன்றி இருந்தால் உடலால் இணைந்த பழக்கம் தேவைப்படுவதில்லை என்ற கருத்தை வலியுறுத்தினர்.

— பல நாளும்

"நீத்தார் எனக்கை விடலுண்டோ? தம்நெஞ்சத்து
யாத்ததோ டியாத்த நட்பு."

என்ற நாலடியின் அடிகளையும் ஈண்டு நினைந்து இன்புறத்தக்க தாகும்.

பெரியோர்களின் நட்புச் சிறந்தது என்றும், நாடோறும் வளரக் கூடியது என்றும், உணர்த்திய வள்ளுவர் அவர்களுக்கு உரிய கடமைகளையும் உணர்த்த மறக்கவில்லை. நட்புச் செய்கின்றவர்கள் செய்வதற் கரிய செயலாகிய நட்பைச்செய்து கொண்ட பின், அதற்குக் கேடு வாராமல் காக்க வேண்டுவது அவர்களின் தலையாய கடமையாகும்.

"செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு." (குறள். 781)

என்று கூறியதை நோக்கின் நட்புச் செய்தற்கு ஆவாரைப் பெறுதலும், பெற்றுற் செய்யும் உபாயமும், செய்தால் திரிபின்றி நிற்றலும் ஆகிய இவையெல்லாம் வேண்டப்படுவனவாகும் என்பதை நாம் நன்கு உணரலாம்.

நட்புச் செய்கின்ற இருவருக்கு முதன்மையாக வேண்டப் படுவது பொறையுடைமையே யாகும். நட்பு மேற்கொண்ட இருவருள் ஒருவர் மற்றவர்க்குத் தீமை செய்யினும், அதனை அவர் பொறுத்துக் கொள்ள வேண்டும். இன்றேல் நட்பு முறியும், பகைமுற்றும் என்பதனையும் அவர்கள் உணர வேண்டும்.

ஒருவர் ஏனையவர்க்குத் தீமையை இயற்றுகின்ற போது நட்பின் உரிமையினுல் நமக்குக் கேட்டினைத் தந்தான் என்றோ, பேதைமையினுன் இத் தீமையினைப் புரிந்தான் என்றோ எண்ணி அவனைப் பொறுத்து, நட்பினை வளர்க்க வேண்டும் என்ற கருத்தினை,

"பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின்." (குறள். 805)

என்ற குறள் மூலம் வள்ளுவர் உணர்த்திச் செல்கின்றார்.

இக்கருத்தினையே நாலடியாரும் "ஒருவர் பொறை இருவர் நட்பு" என்ற தொடரான் நமக்கு உணர்த்துகின்றது. மேலும் எருவிட்டு நீர் பாய்ச்சி, பன்னாள் காப்புச் செய்த பின்னால், மணி நிகர்த்த நெல்மணியை அறுவடை செய்து, இல்லத்திற்குக் கொண்டுவருகின்றோம். அத்தகைய நெல்லுக்கும் உமியுண்டு என்பதையாவரும் அறிவர். அஃறிணை உயர்திணை எனப்பட்ட இருவகை உயிர்கட்கும் இன்றியமையாததாகிய அமிழ்தம் என்று பெரியோர்களால் புகழ்ந்து கூறப்பட்ட உண்ணும் நீருக்கும் நுரையாகிய குற்றம் உண்டென்பதையும் அறிவோம்.

ஆகலின் நட்பு யாத்தாரோடு பன்னாள் நலமுற வாழ்ந்த பின்னர், ஏதோ ஒரு குற்றம் இழைத்தான் என்று கருதி அவனைப் பிரிதல் நன்றாகாது என்ற கருத்தினை வலியுறுத்தின்ற இக்குறளை எண்ணி எண்ணி, நட்பினை மேன்மேலும் ஓம்பு வாராக.

---

## 1137-ம் ஞு, ஆவணி, புரட்டாசி மாதங்களில்
## கலைக்கோயிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 8953 | 'குமரகுருபரன்' மலர் 11 (1960) | ஆசிரியர், 'குமரகுருபரன்'. |
| 8954 | ஸ்ரீ இராமலிங்கர் இயற்றிய திருவருள் வழக்க விளக்கம் வகையரு | P. P. துரைசாமி, 14/346-மில்ரோடு, கோவை |
| 8955 | Readers' Digest. January 1961 | Readers' Digest Association Ltd. |
| 8856 & 57 | ஸ்தோத்திரமாலா (முதல் & 2வது பாகம்) | வினியோகிப்பவர் கடையம் G. அய்யாவய்யர், காண்டிராக்டர், செங்கோட்டை. |
| 8958 | இந்தியத் தமிழ் வாசகம் (6ம் வகுப்பு) | வித்துவான் கவிரத்னம் திரு. வே. சங்கரநாராயண பிள்ளை. |
| 8959 & 60 | Readers' Digest. June & December 1960 | Readers' Digest Association Ltd. |
| 8961 | கிராமவாசியின் பஞ்சாங்கமும், விவசாய விளக்கங்களும் | சென்னை விவசாய இலாகா வெளியீடு. |
| 8862 | Digest of central Acts (October, December, 1960) Vol. V No. 4 | Lock Sabha Secretariate, New Delhi. |
| 8963 & 64 | Readers' Digest. February & March 1961 | Readers' Digest Association Ltd. |

(தொடரும்)

## திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

# ‘ திருமுறை வெளியீடுகள் ’

| | | | ரூ. ந. பை |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை | ... | 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... | 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும்) (புதிய பதிப்பு) | ... | 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் .. | ... | 2 25 |
| 6* | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) .. | ... | 1 30 |
| 7* | திருவாசகம் (அச்சில்) | | |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) | ... | 0 56 |
| 10* | திருமந்திரம் .. (புதிய பதிப்பு) | ... | 2 25 |
| 11 | பதினோராந்திருமுறை .. | ... | 1 25 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) | ... | 2 50 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு | ... | 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல்-குறிப்புரையுடன் (அச்சில்) | ... | |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... | 1 75 |
| 19 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் .. | ... | 2 75 |
| 20 | .. யுத்த தேவகாண்டம் .. | ... | 2 00 |
| 21 | .. தக்ஷகாண்டம் .. | ... | 1 50 |
| 22 | கந்தபுராண வசனம் (அச்சில்) | | |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... | 0 25 |
| 24 | கந்தரனுபூதி | ... | 0 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... | 0 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... | 0 06 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் | ... | 0 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 06 |
| 30 | சிவஞான சித்தியார், ஹிந்தி மட்டும் | ... | 1 00 |
| 31 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 50 |
| 32 | திருக்குறள் – பொருட்பால் .. | ... | 2 50 |
| 33 | திருக்குறள் – காமத்துப்பால் .. | ... | 1 00 |
| | ஷை 31, 32, 33 திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 00 |

Registered with the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.
Regd No. M. 5574 குமரகுருபரன்.

| | | | |
|---|---|---|---|
| 34 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 75 |
| 35 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 13 |
| 36 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 75 |
| 37 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 37 |
| 38 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை - மதுரை மீனுட்சியம்மை குறம் | ... | 2 75 |
| 39 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... | 1 25 |
| 40 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை - தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 00 |
| 41 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... | 1 00 |
| 42 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... | 0 75 |
| 43 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... | 0 50 |
| 44 | தமிழிசைப்பாக்கள் [அச்சில்] | | |
| 45 | பெரியபுராணம் – உரைநடை | ... | 2 00 |
| 46 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... | 2 25 |
| 47 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... | 0 50 |
| 48 | அபிராமி பட்டர் பிரபந்தம் (மூலம்மட்டும்) (அச்சில்) | ... | |
| 49 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 13 |
| 52 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... | 1 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு | ... | 2 75 |
| 54 | ஷை ஷை காமத்துப்பால் ஷை | ... | 1 20 |
| 55 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... | 0 50 |
| 56 | மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... | 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், "தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோயில்தெரு, திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச் சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் – '61.